REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 12 பக்கம் விலை 50 காசு










● மலர் 5 சென்னை 12—6—1981 வெள்ளி வெளியூர் 13—6—1981 சனி இதழ் 233 ●

## போதுமான அளவு மழை பெய்யாததால் தமிழ்நாட்டில்

# வறட்சி நிவாரணப்பணி தொடர்ந்து நடக்கும்

## முதல்வர்புரட்சித்தலைவர் அறிவிப்பு

மதுரை, ஜூன் 12- தமிழ்நாட்டில் போதுமான அளவு மழை பெய்யாததால், வறட்சி நிவாரணப்பணிகள் தொடர்ந்து நடைபெறும் என முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

மதுரையில் வறட்சி நிவாரணப் பணிகள் குறித்து முதல்வர் புரட்சித்தலைவர் மாவட்ட கலெக்டர்களுடன் ஆலோசனை நடத்தினார். அதன் பிறகு நிருபர்களுக்கு முதல்வர் பேட்டி அளித்தார்.

மதுரையில் முதல்வர் புரட்சித்தலைவரிடம் நிருபர்கள் கேட்ட கேள்வியும் அதற்கு முதல்வர் அளித்த பதில்களும் வருமாறு:-

கேள்வி:- இதுவரை வறட்சி நிவாரணப்பணிகளுக்காக எவ்வளவு தொகை செலவழிக்கப்பட்டுள்ளது?

முதல்வர்:- இம்மாதம் ஜூன் 5ந் தேதி வரை 11 கோடியே 16 லட்சம் ரூபாய் வரை செலவிடப்பட்டுள்ளது. வறட்சி நிவாரணப் பணிகளுக்காக மத்திய அரசு 48 கோடியே 9 லட்சம் ரூபாய் அளித்துள்ளது.

இதில் தமிழக அரசின் சார்பில் 40 கோடி ரூபாய் பணிகளுக்காக அனுமதி அளித்துள்ளோம். இதில் குடி தண்ணீர் வேலை வாய்ப்புக்கள் பணிகளுக்காக 29 கோடியே 5 லட்சம் ரூபாய் செலவு செய்து வருகிறோம்.

கேள்வி: வறட்சி நிவா

(2-ம் பக்கம் பார்க்க)



## தஞ்சை வக்கீல் சாமிநாதன் திருமணம்: முதல்வர் அறிவுரை

தஞ்சாவூர், ஜூன் 12— தஞ்சை வக்கீல் சாமிநாதன் திருமணநிகழ்ச்சிக்குமுதல்வர் புரட்சித்தலைவர் தலைமை வகித்து மணமக்களை வாழ்த்தினர்.

தஞ்சை வழக்கறிஞர் சாமிநாதன் டாக்டர் திலகவதி திருமணம்இன்று தஞ்சை ராமநாதன் செட்டியார் அரங்கத்தில் நடைபெற்றது. தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் திருமண நிகழ்ச்சிக்கு தலைமை வகித்து திருமணத்தை நடத்தி வைத்தார்.

அமைச்சர்கள் எஸ்.டி.எஸ்., திருநாவுக்கரசு, கோமதி சீனிவாசன் ஆகியோர் திருமண விழாவில் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினர். மற்றும் திருவாரூர் தென்கோவன், இளங்கோ, வீராசாமி எம்.எல்.ஏ. சுப்பிரமணியம் எம்.எல்.ஏ. அழகு திருநாவுக்கரசு, ஆனந்தன் சதானந்தம், துரை கோவிந்தராஜன் ஆகியோர் திருமணத்தில் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தினர்.

முதல்வர் புரட்சித்தலைவர்மணமக்களைவாழ்த்திப் பேசுகையில்கூறியதாவது:

மணமக்களில் ஒருவர் டாக்டர். ஒருவர் வக்கீல். இவர்கள் தங்கள்வாழ்க்கையில் ஒருவருக்கு ஒருவர் பாதுகாப்பாக இருப்பார்கள்.

நீண்டகாலமாக சாமிநாதன் நான் தஞ்சாவூருக்கு வரவேண்டும் என கேட்டுக் கொண்டிருந்தார். இன்று அவரது திருமண நிகழ்ச்சியிலேயே கலந்து கொள்ள வந்துள்ளேன்.

பெரியவர்கள் காட்டிய வழியில், பெரியவர்களை மதித்து வாழ வேண்டும்.

உங்களுக்குள் ஓர் பிரச்சினை வந்தால் அதை நீங்களே தீர்த்துக்கொள்ளுங்கள். உங்கள் பிரச்சினைகளை மூன்றாவது நபரிடம் கூறாதீர்கள்.

மணமக்கள் பல்லாண்டு வாழ வாழ்த்துகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

❖ புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர். மன்ற மாநாடு படைக்கும் புதுவரலாறு
❖ தமிழகமே சேலத்தில் கூடியது போன்ற மாட்சி!
❖ எங்கெங்கு நோக்கினும் கொடிகள் தோரணங்கள்-வரவேற்பு வளைவுகள்

## 10 லட்சம் மக்கள் திரளும்தமிழ்ப்பெரும்படையின்

# வரலாறு படைக்கும்பேரணி

## சேலத்தின் புதுச் சரிதம் காணீர்

சேலம், ஜூன் 12-புரட்சித்தலைவர் பட்டாளத்து முதல் வரிசைச் சிப்பாய் பூலாவரிசுகுமாரன் செந்நீர் வடித்து, தன்னுயிர் ஈந்து, தியாக வரலாறு படைத்த சேலத்தில் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற மாநாடு சீரோடும் சிறப்போடும் நடக்கிறது. சனிக்கிழமையன்று காலை மூவேந்தர் திருஉலாபோல்அகிலம் நடுங்கும் ஊர்வலம் நடக்கிறது.

திராவிட இயக்க வரலாற்றில் சேலம் நகர் இப்படி ஒரு மாநாட்டைக் கண்டதில்லை என்று சொல்லும் அளவுக்கு மன்றத்து மாநாடுநடைபெறஏற்பாடுகள் அனைத்தும்முடிந்து வருகின்றன.

மாநாடு நடக்கும்போஸ் மைதானத்தை வந்துசேரும ரோடுகள் அனைத்தும் வளைவுகள் பதாகைகள், கொடிகள், தோரணங்கள். கண் எட்டும் இடமெல்லாம்எழிற்கோலம். சேலம் நகரே எழிற்கோலம் பூண்டுள்ளது.

முதல்வர் புரட்சித்தலைவரையும், கழகப் பொதுச்செயலாளரையும், அமைச்சர் பெருமக்களையும், மன்றத் தலைவர்களையும், கழகத் தலைவர்களையும் வரவேற்கும் தமிழ் வாழ்த்துப் பதாகைகள் விழிபோன இடமெல்லாம் காட்சி அளிக்கின்றன.

"திராவிட பாரம்பரியத்தின் கொள்கைக் குன்றே எங்கள் புரட்சித்தலைவரே வருக வருக" என்று தருமபுரி மாவட்டம் சார்பில் பதாகை கட்டப்பட்டுள்ளது.

"சத்தியத்தாயின் தவப் புதல்வனே! எங்கள் இதய தெய்வமே வருக வருக" என்று புதுவை மாவட்ட சார்பில் பெரிய பதாகை கட்டப்பட்டுள்ளது.

"அண்ணாவின் இதயக் கனியே எங்கள் தங்கம் புரட்சித்தலைவர் உலகத் தமிழ் மாநாடு கட்ட உத்தமத்தலைவரே வருக வருக என்று வாழ்த்துப்பதாகைகள் வைக்கப்பட்டுள்ளன.

### அலங்கார முகப்பு: அதிலே தலைவர்

மாநாட்டு முகப்பு பந்தல் கலை அலங்காரத்தோடு- கவின் நயத்தோடு காட்சி அளிக்கிறது.

கோபுரம் போல மாநாட்டுப்பந்தல் முகப்பு அலங்கரிக்கப்பட்டுள்ளது. அங்கே உலக உருண்டை வடிவமைப்பு. அதன் மேல் தமிழகத்தின் காவல் தெய்வம் புரட்சித்தலைவர் கம்பீரமாக நிற்கிறார்.

இருபக்கமும் அய்யாவும் அண்ணாவும் புரட்சித் தலைவருக்கு ஆசி கூறி வாழ்த்துவது போல வடிவமைக்கப்பட்டுள்ளது.

முக்கிய பிரமுகர்கள் வரும் வாயிலில் போறிஞர் பெருந்தகைக்குப் பின்னால் கோபுர அமைப்பு செய்யப்பட்டுள்ளது.

### மும்மதக் கோயில்

இந்து, கிறித்துவ, இஸ்லாம் கோயில்கள் போல இக்கோயில்கள் மின் விளக்கால் அமைக்கப்பட்டுள்ளன. கண்ணைக் கவரும் வகையில் இருக்கிறது.

மாநாட்டு மேடை பாங்கோடு அமைக்கப்பட்டுள்ளது. எப்பக்கம் அமர்ந்து பார்த்தாலும் தலைவர்களை நன்கு பார்க்கும் வகையில் மேடை அமைக்கப்பட்டுள்ளது.

மாநாட்டுப் பந்தல் 500 அடி நீளம் 300 அடி அகலம் கொண்டதாக

(2-ம் பக்கம் பார்க்க)

## பிரமாண்ட ஊர்வலம்: திரைப்படமாகிறது

நாடே வியக்கும்வகையில் நடக்க உள்ள மாபெரும் ஊர்வலத்தில் கலந்து கொள்ளுவோர் முழங்க வேண்டிய முழக்கங்கள் மாநாட்டு அலுவலகத்திலும் அரங்கிலும் எழுதி வைக்கப்பட்டுள்ளது.

மாநாட்டிற்கு வருகை தருவோர் மாவட்ட வாரியாக தங்குவதற்கான ஏற்பாடுகள் குறித்தும் விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

### 3 காமிராக்கள்

நானிலமே போற்றும் வகையில் நடக்க உள்ள இந்த ஊர்வலத்தை சென்னை ஒர்க்கர்ஸ் கம்பைன்சார் 3 காமிராக்களைக் கொண்டு திரைப்படமாக எடுக்கிறார்கள்.

மாநாட்டினை ஒட்டி அமைக்கப்பட்டுள்ள பிரம்மாண்டமான பந்தலில், எங்கு அமர்ந்திருந்தாலும் மேடையில் நடக்கும் நிகழ்ச்சிகளை தெளிவாக காண பந்தலில் 25 டெலிவிஷன் பெட்டிகள் வைக்கப்பட்டுள்ளன.

ஊர்வலத்தில் பங்கேற்க அனைவரும் காலை 8 மணிக்கு ஊர்வலம் புறப்படும் உடையாப்பட்டி அண்ணா சிலை அருகே வந்து விட வேண்டும் எனக் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.





## 72 அக்டோபர் உணர்ச்சி மங்கவில்லை என எடுத்துக்காட்ட
## திண்டுக்கல் தீர்ப்பே தமிழகத்தின் தீர்ப்பு என உறுதி செய்ய
## சுகுமாரன் செந்நீரால் சிவப்பான சேலத்தில் மன்றத்து சேனை அணிவகுத்திடல்காணீர்!

## முதல்வர் பேட்டி...

1-ம் பக்கத் தொடர்ச்சி

ரணப் பணிகளுக்காக மத்திய அரசிடம் மேலும் உதவி கேட்பீர்களா?

முதல்வர்: தேவைக்கு ஏற்ப அணுகுவோம்.

கேள்வி: சமீபத்தில் பரவலாக மழை பெய்ததால் வறட்சி நிவாரணப் பணிகளுக்கு தடை ஏற்பட்டுள்ளனவா? நிவாரணப் பணிகள் தொடருமா?

முதல்வர்: பயனளிக்க கூடிய வகையில் மழை பெய்யவில்லை. இதனால் பணிகள் பாதிப்பு எதுவும் ஏற்படவில்லை. தேவைப்படும் வரை நிவாரணப் பணிகள் தொடர்ந்து நடைபெற்று வரும்.

கேள்வி: நிவாரணப் பணிகள் மூலம் எவ்வளவு பேர் வேலை வாய்ப்புபெற்றுக்கிறார்கள்

முதல்வர்: நாள் ஒன்றுக்கு 2 லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்படுகிறது.

கேள்வி: குடிநீர் — வடிகால் வாரியத்தின் மூலம் அமைக்கப்பட்டுள்ள ஆழ்குழாய் கிணறுகளில் பழுது ஏற்பட்டால் அதைப் பழுது பார்க்கும்பொறுப்பு யாருடையது?

முதல்வர்: குடிநீர் வடிகால் வாரியமாக இருந்தாலும் சரி, அல்லது உள்ளாட்சி ஒன்றியங்களில் ஒப்படைக்கப்பட்டிருந்தாலும் சரி அவைகள் உடனடியாகப் பழுது பார்க்கப்படும்.

கேள்வி: ஆழ் குழாய் கிணறுகள் அதிகமாக ஏற்படுத்தப்படுமா?

முதல்வர்: தேவைக்கு ஏற்ப ஏற்படுத்தப்படும். எப்படியும் மக்களுக்கு குடிதண்ணீர் வசதி செய்து தர வேண்டும் என்பது தான் எங்கள் நோக்கம்.

கேள்வி: மதுரை நகரில் குடிதண்ணீர் பற்றுக் குறை ஏற்பட்டுள்ளதாக சொல்லப்படுகிறதே?

முதல்வர்: போதுமான அளவு தண்ணீர் கிடைக்க ஆங்காங்கு குழாய்க்கிணறுகள் அமைக்கப்பட்டுள்ளது சில பகுதிகளுக்கு லாரி மூலம்தண்ணீர்விநியோகம் செய்யப்படுகிறது.

கேள்வி: மதுரை நகரில் குழாய் கிணறுகள் அதிகப்படுத்தப்படுமா?

முதல்வர்: தேவைக்கு ஏற்ப விரிவுபடுத்தப்படும்.

கேள்வி: வண்டியூர் கண்மாய் பழுதுபடுத்தப்படும் என்று ஏற்கனவே அறிவிக்கப் பட்டிருந்ததே?

முதல்வர்: முதலில் வறட்சியைப் போக்கும் நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது. வறட்சியால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவி நிவாரணம் அளித்து விட்டு பிறகு அழகுபடுத்தலாம். அதனால் அழகுபடுத்தும் திட்டம் கைவிடப்பட்டதாக அர்த்தம் அல்ல. பின்னர் நிறைவேற்றப்படும்.

கேள்வி: வறட்சிக்கு இலக்காகும் பகுதியில நிறைவேற்றப்படும் திட்டங்கள் வறட்சி நிவாரணப் பணியோடு இணைத்து செயல்படுத்தப்

(5-ம் பத்திப் பார்க்க)

(1-ம் பத்தி தொடர்ச்சி)

படுமா?

முதல்வர்: ஒருங்கிணைந்து செயல்படுத்தப்படும்.

கேள்வி: சமீபத்தில் நடந்த ராமநாதபுரம் கலவரம் குறித்துபலவிதமான கருத்துக்கள் தெரிவிக்கப்படுகின்றன.

ஊரைவிட்டுவெளியேறிய மக்கள் இன்னும் ஊருக்கு திரும்பி வரவில்லை என்று மற்ற கட்சிக்காரர்கள் கூறுகிறார்களே?

முதல்வர்:- எந்தவித அச்சமும் யாருக்கும் இல்லை.மாவட்டகலெக்டர் நடவடிக்கை எடுத்துள்ளார். மோசமான நிலை எதுவும் இல்லை.

கேள்வி: பள்ளிக்கூட மாணவர்களுக்குநோட்டுப் புத்தகங்கள் வழங்குவதில் புதிய முறைகடைபிடிக்கப் பட்டுள்ளதே?

முதல்வர்: நோட்டுப் புத்தகங்கள் வெளிமாநிலத்திற்கு சென்று விடக்கூடாது என்பதற்காக கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் நோட்டுப் புத்தகங்களை வழங்கி வருகிறோம். பள்ளித்தலைமை ஆசிரியரிடம் கையொப்பம் பெற்று புத்தகம், நோட்டுகள் பெற்றுக்கொள்ளலாம்.

எல்லா இடங்களிலும் தேவையான அளவு கிடைக்க ஏற்பாடுசெய்யப் பட்டுள்ளது. தலைமை ஆசிரியர்களிடம் கையொப்பம் பெறுவதில் எந்த இடைஞ்சலும் இல்லை.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

பேருந்துகளுக்கும், தங்குவதற்கும் இடவசதி:

# மாநாடு ஏற்பாடு குறித்து சேலம் கண்ணன் அறிக்கை

**சேலம்,ஜூன் 12- சேலம் நகரையே திணறச் செய்யும் வகையில் மாநாட்டுக்கு வர இருக்கும் லட்சக்கணக்கான தோழர்களுக்கு செய்யப்பட்டுள்ள இடவசதிகள் பற்றி மாவட்ட செயலாளர் பி.கண்ணன் விளக்கியுள்ளார்.**

பேருந்துகளை எங்கே நிறுத்துவது என்பதையும் அவர் வெளியிட்டுள்ள அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

சேலம் மாவட்ட செயலாளரும் மாநாட்டுப் பொறுப்பாளருமான பி. கண்ணன் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறிஇருப்பதாவது:-

ஜூன் 13,14 ஆகிய இரண்டு தினங்களில் சேலம் போஸ் மைதானத்தில் நடைபெற இருக்கும் புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டிற்கு வருகை தரும் வெளி மாவட்டத் தோழர்கள் தங்க ஆங்காங்கே சிறப்பான வகையில்இடவசதிகள் செய்யப்பட்டு இருக்கின்றன.

எந்த இடம் எந்த மாவட்டத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளது என்ற விபரத்தை மாநாட்டு அலுவலகத்திற்கு தொடர்பு கொண்டு தெரிந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

### மகளிர் தங்குவதற்கு

வெளியூரிலிருந்து வரும் மகளிருக்கு மாநாட்டு திடலை ஒட்டியுள்ள நேரு கலையரங்கம் ஒதுக்கப்பட்டுள்ளது.

வெளி மாவட்டங்களில் இருந்துவரும் பேருந்துகளை நிறுத்துவதற்கு தகுந்த இடவசதிகள்செய்யப்பட்டு இருக்கிறது.

சேலம் காந்தி ஸ்டேடியம், கோட்டைமைதானம் அம்மாப்பேட்டை பகுதி, அன்னதானப்பட்டி, சேலம் பைபாஸ் ரோடு ஆகிய இடங்களில் வாகனங்களை நிறுத்தும்படி கேட்டுக் கொள்கிறேன்.

### உணவு வசதி

லட்சக்கணக்கான மக்கள் அமரும் திடலுக்குள் உணவு வகைகள் அனைத்தும் ஏராளமான அளவு விற்பனை செய்ய கடை வசதிகள் செய்யப்பட்டு இருக்கிறது. வருகின்ற தோழர்கள் மகளிர் இதனைப் பயன்படுத்தக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறேன்.

மாநாட்டு திடலுக்குள் .0 இடங்களில் நாற்பதுக்கும் மேற்பட்ட குழாய் இணைப்புகள் மூலம்குடிநீர் வசதி அதிக அளவு செய்ய பட்டு இருக்கிறது. கழிப்பிட வசதிகள் சுகாதாரத்துடன் சிறந்த முறையில் அமைக்கப்பட்டுள்ளது.

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர்.மன்ற மாநாட்டினை மிகச் சிறந்த முறையில் நடத்தி மாபெரும் வெற்றி காண சேலம் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு கழகத் தோழர்கள் மன்றதோழர்கள் அனைவரும் கண் துஞ்சாது ஒத்துழைக்க கேட்டுக்கொள்கிறேன்.

ஒவ்வொரு ஒன்றிய நகர கழகங்களும், சேலம் நகர வார்டுவாரியாக ஊர்வலத்தில் அலங்கரிக்கப்பட்ட வாகனங்களை ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக் கொண்டுவரவேண்டுமென கேட்டுக்கொள்கிறேன்.

### ஊர்வல பாதைகளில் அலங்காரம்

ஊர்வலம் வரும் அம்மாப்பேட்டை, அம்மாப்பேட்டை மெயின் ரோடு, சின்னக்கடைவீதி பஜார், வள்ளுவர் சிலை, ராஜாஜி சிலை, அப்சரா தியேட்டர், நியூசினிமா, காந்திசிலை வழியாக அண்ணாசிலை ஆகிய பாதை அனைத்தும் ஒவ்வொரு ஒன்றிய, நகர சேலம் நகர வார்டு கிளை கழகங்கள் சிறப்பான முறையில் வளைவுகள், தோரணங்கள், கொடிகள் கட்டும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இதயதெய்வம் புரட்சித் தலைவர் வரும் ஜங்ஷன், ஐந்து ரோடு, சாரதா கல்லூரி, அஸ்தம்பட்டி, கொமாரசாமிபட்டி மாவட்ட ஆட்சித்தலைவர் ரோடு ஆகிய பகுதிகளிலும் வளைவுகள் தோரணங்கள் கொடிகள் கட்டும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இந்த மாநாட்டு ஊர்வலத்தில பங்கேற்கும் சைக்கிள் அணியினர்மோட்டார் சைக்கிள் அணியினர் மாநாட்டு அலுவலகத்தில் பதிவு செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன். ஊர்வலத்தில் வாகனங்கள் விடும் தோழர்கள் பதிவு செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

### தொண்டர் படை

தொண்டர்படையில் சேர விரும்புவோர் பதிவு செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

14.6.81ம் நாள் காலை நடைபெற உள்ள சங்ககிரி சட்ட மன்ற உறுப்பினர் பி. தனபால் எம். எல். ஏ. திருமண விழாவிற்கு தோழர்கள் அனைவரும் வந்து வாழ்த்த கேட்டுக் கொள்கிறேன்.

மாநாடு மிகப்பெரிய வெற்றி பெற அனைவரும் தங்களால் இயன்ற ஒத்துழைப்பையும் தரும்படி அன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு கண்ணன் அறிக்கையில்கூறியுள்ளார்.

சேலம் மாநாடு:

துறைமுக தொகுதியிலிருந்து

## விசேஷ பஸ்கள்

சென்னை, ஜூன் 12— சேலம் மாநாட்டிற்கு துறைமுகத் தொகுதியில் இருந்து சென்னை மாவட்ட கழக துணைச்செயலாளர் ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, எம். வி. ராமன், கே. தாமோதரன் தலைமையில் 500 பேர் விசேஷபஸ்களில் செல்லுகிறார்கள்.

இதயக்கனி எம்.ஜி.ஆர். மன்றத் தோழர்கள் 50 பேர் ஆர். காளிதாஸ் தலைமையில் புறப்படுகிறார்கள்.

47-வது வட்டம்வட்டச் செயலாளர் எம். ஏ. காதர் வட்ட அவைத்தலைவர் ப. ரராஜேந்திர சோழர் இவர்களுடன் 50 பேர் சேலம் நோக்கி ரயில் மூலம் புறப்படுகின்றனர்.

48-வது வட்ட துணைச் செயலாளர் அமீர்பாட்சா மார்க்கஸ், தியானேஸ்வரன் உட்பட 40 பேர் பஸ் மூலம் மாநாட்டிற்கு புறப்படுகின்றனர்.

49 வட்டபகுதிபிரதிநிதி பார்த்தசாரதி,கோபிநாத் வி. நடராசன், பாலகிருஷ்

(8-ம்பத்தி பார்க்க)

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

ணன், நடராசன் மற்றும் 50 பேர் சேலம் மாநாட்டிற்கு இரயில் மூலம் புறப்படுகின்றனர்.

50 வது வட்டம் பர்மா பஜார் நல சங்க தோழர்கள் நூற்றுக்கு மேற்பட்டோர் மொய்தீன் தலைமையில் இன்று பஸ் மூலம் புறப்படுகின்றனர்.

51 வது வட்ட செயலாளர் எம். எஸ். மணி பீர்முகமது ராமச்சந்திரன் ராஜேந்திரன் உட்பட 50 பேர் தனிபஸ் மூலம்சேலம் நோக்கி புறப்படுகின்றனர்.

52 வது வட்ட செயலாளர் வி.கே. கபூர், சீனிவாசன், பாலன், ராமலிங்கம், தயாளன் சுந்தரேசன் உட்பட 60 பேர் இரயில் மூலம் சேலம் புறப்படுகின்றனர்.

53 வது வட்டம் துரை, ஜானி இனயத்துல்லா உட்பட 50 பேர் சேலம் மாநாட்டிற்கு பஸ்மூலம் இன்று இரவு புறப்படுகின்றனர்.

## வரலாறு படைக்கும் பேரணி...

(1.ம் பக்கத் தொடர்ச்சி)

பெரிய அளவில்இவை அமைக்கப்பட்டுள்ளது.

மாநாட்டை ஒட்டி நடை பெற இருக்கும் ஊர்வலம் சேலம் நகரில் புதிய வரலாறு படைக்க இருக்கிறது.

லட்சக்கணக்கான தோழர்களும் மன்ற மறவர்களும் அணி வகுத்து வரும் இந்த ஊர்வலத்தில் பல்வேறு நிகழ்ச்சிகள் இடம் பெற்றுள்ளன.

உடையாம்பட்டி அண்ணா சிலையில் இருந்து ஊர்வலம் புறப்படுகிறது.

யானைகள் மீது கழகக் கொடி கம்பீரமாகப்பறக்க தோழர்கள் முன்னே யானை மீது வருகிறார்கள்.

அதனை அடுத்து கழகக் கொடி தாங்கி 250 மோட்டார் சைக்கிள் அணி வகுத்து வருகின்றனர்.

### கரகாட்டம்

மயிலாட்டம், ஒயிலாட்டம், கரகாட்டம் குறவன் குறத்தி நடனம் போன்ற கலைநிகழ்ச்சிகள் அதனை அடுத்து இடம் பெறுகிறது.

அதனை அடுத்து வீர நடைபோட்டு மகளிர் பிரிவினர் செல்கிறார்கள்.

அவர்களை அடுத்து தஞ்சை நடனக்குதிரை நடனமாடிச் செல்லும் அதன் பின்னர் அலங்கார வண்டிகள் செல்லும். அலங்கார தேரில் மாநாட்டுத் தலைவர்கள் செல்வார்கள்.

லட்சக்கணக்கானகழகத் தோழர்கள் மன்றத்து மறவர்கள் பொதுமக்கள் இநத ஊர்வலத்தில் ஏறு நடைபோட்டுச் செல்வார்கள்.

மாநாட்டு மக்கள் வெள்ளத்தை ஒழுங்குபடுத்த 3 ஆயிரம் தொண்டர்களுக்கு இன்று பயிற்சி அளிக்கப்பட்டது.

இந்த தொண்டர் படையில் 200 மகளிர் இடம் பெற்றுள்ளனா.

கழக எம். எல். ஏ. ஐ. கணேசன் தொண்டர் படைத் தளபதியாக பணியாற்றி பயிற்சி கொடுத்து வருகிறார்.

திராவிட இயக்க வரலாற்றில் சேலம் நகரில் இப்படி ஒரு மாநாடு நடைபெற்றது இல்லை என்ற வரலாற்றைப் படைக்க அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன், செயலாளர் ஆர். சவுந்தரராசன், பொருளாளர் எஸ்.வி. வரதராஜன்,சேலம் மாவட்ட கழகச் செயலாளர் பி. கண்ணன் மற்றும் கழகத் தோழர்களும் மன்றத் தோழர்களும் தீவிரமாக செயலாற்றி வருகின்றனர்.

மாநாடு வெற்றிகரமாக அமைந்துமுதல்வர் புரட்சித் தலைவரின் பாராட்டைப் பெற மன்றத்தலைவர்கள் பம்பரம் போல— தேனீயாக பணியாற்றி வருகின்றனர்.

# வறட்சி நிவாரணம்: குறைகள் இருந்தால் உடனடி விசாரணை

முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு

**மதுரை, ஜூன 12- வறட்சிநிவாரணப்பணிகளை, அல்லது தன்னிறைவுத்திட்டப்பணிகளில்குறைகள்இருப்பதாக யாராவது புகார் கூறினால் அதுபற்றி மாவட்டக் கலெக்டர்கள் விசாரித்து உடனடியாக நடவடிக்கை எடுப்பார்கள் என முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

வறட்சிநிவாரணப் பணிகள் தேவைப்படும் வரை தொடர்ந்து நடைபெறும். தமிழ்நாட்டில் வறட்சி நிவாரணப்பணிகள் மூலம் நாள் ஒன்றுக்கு 2 லட்சம் பேர் வேலைவாய்ப்பு பெறுகின்றனர். 11 கோடியே16 லட்சம் ரூபாய் செலவு செய்யப்பட்டுள்ளதுஎன்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிகளுக்குப் தேவைக்கேற்ப மத்திய அரசை அணுகுவோம் என்றும் முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

மதுரையில் முதல்வர் புரட்சித்தலைவர் அளித்த பேட்டியில் கூறியதாவது:-

வறட்சி நிவாரணப்பணிகளில், அல்லது தன்னிறைவு திட்டபணிகளில் குறைகள் இருப்பதாக யாராவது கருத்துகளை வெளியிட்டால் உடனடியாக அது பற்றி விசாரித்து மாவட்ட கலெக்டர்கள் நடவடிக்கை எடுப்பார்கள்.

தன்னிறைவுத் திட்டம், வறட்சிநிவாரணப்பணிகள் பற்றிவிரிவாகவிவாதிக்கப் பட்டது. தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் தேர்ந்தெடுக்கட்ட உள்ளாட்சி ஒன்றியங்களில் நடைபெறும் வேலைகள் வறட்சி நிவாரண பணிகள் நடைபெறும் நிலைகள் குறித்து விவாதிக்கப்பட்டன. வறட்சி நிவாரணம் தன்னிறைவு திட்ட பணி இரண்டையும் ஒருங்கிணைத்து சிக்கிரமாகவும், போடப்பட்ட திட்டத்தை விரிவாக்கலாம்.

முரண்பாடு அற்ற வகையிலும் நிரந்தரமாக அந்த பகுதி மக்களுக்கு பயன் தரும் வகையிலும் நிறைவேற்றப்பட வேண்டும் என்று முடிவு எடுக்கப் பட்டது.

இந்த ஆண்டு 180 உள்ளாட்சிஒன்றியங்களில் தன்னிறைவுத் திட்டம் நிறைவேற்றப்படும் பணிகளின் நிலைமை அதனால் மக்கள் அடைந்த பயன்கள் குறித்தும் இக்கூட்டத்தில் பரிசீலிக்கப்பட்டது.

குறைகள் இருந்தால் தீர்க்கவும்ஆலோசனை செய்யப்படடது.

இந்த திட்டங்களினால் கிராமப்புற மக்களுக்கு பயன்கள் கிடைத்திருக்குமாயின் இதை பின்பற்றி 180 ஊராட்சி ஒன்றியங்களிலும் பணியை தொடர்வதுஎன்றும்முடிவுசெய்யப் பட்டது.

வறட்சி நிவாரணப்பணிகள் தன்னிறைவுதிட்டப் பணிகள் ஆகியவற்றில் குறைகள் இருப்பதாக யாராவது கருத்து வெளியிடுவாரானால் உடனடியாக அதுபற்றி மாவட்ட கலெக்டர்கள் விசாரித்து நடவடிக்கை எடுப்பது என்று முடிவு எடுக்கப் பட்டது தவறு நடைபெறவில்லை என்றால், தவறான தகவல் தந்தவர்களிடம் விளக்கம் கோரவும், உண்மைகளை அறியவும் கலெக்டர்கள் ஈடுபடுவார்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.





# நடிகர் அமிதாப்பச்சனைக் கடத்த இருந்த பயங்கர கொள்ளைக்காரன் கைது

புதுடெல்லி, ஜூன் 12- இந்தி நடிகர் அமிதாப்பச்சனை கடத்த திட்டமிட்டு இருந்த பயங்கரகொள்ளைக்காரன் கைது செய்யப்பட்டுள்ளான்.

இந்தப் பயங்கரக் கொள்ளைக்காரன் 6 கொலைகளைச்செய்தவன். 20 க்கும் மேற்பட்டவர்களைக் கடத்திச் சென்று 50 லட்ச ரூபாய்வரை சம்பாதித்த பயங்கரகில்லாடி.

இந்த கொள்ளைக்காரன் பெயர் ராஜ்குமார். 24 வயதானவர். கல்லூரியில் படித்து பட்டமும் பெற்ற வாலிபர்.

இவர் பம்பாயில் சில சினிமா நடிகர்களுடன் தொடர்பு கொண்டு இருந்தார்.

பல பெரும் பணக்காரப் புள்ளிகளைக் கடத்திச் சென்று அவர்களை விடுதலை செய்ய லட்சக்கணக்கில் பணம் பெற்று ருக்கிறார்.

கடந்த 4 ஆண்டுகளில் 20 பெரும் புள்ளிகளை கடத்திச் சென்று ரூ. 50 லட்சம் வரை பணம் பறித்திருக்கிறார்.

இது மட்டுமல்ல. 6 கொலைகளையும் செய்தவர்.

இந்த பலே கொள்ளைக்காரனைப் பிடிப்பது போலீசாருக்குப் பெரும் பிரச்சினையாக இருந்தது.

போலீசாரிடம் பிடிபடாமல் போலீசாருக்கு டிமிக்கி கொடுத்து வந்தான்.

இந்தக்கொள்ளைக்காரன் தெற்கு டெல்லியில் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்து இருந்தான்.

அந்த வீட்டுக்கு வந்த போது போலீசார் இந்தக் கொள்ளைக்காரனைவளைத்து பிடித்தனர்.

பிறகு இந்தராஜ்குமாரை போலீசார் விசாரித்த போது பலதிடுக்கிடும் தகவல்கள் வெளிவந்துள்ளன.

"என்னைக்கைது செய்யாமல் இருந்தால் இந்தி நடிகர் அமிதாப்பச்சனைக்கடத்திச் சென்றுஇருப்பேன். அதற்கு திட்டம் போட்டு இருந்தேன்" என்று அவன் போலீசாரிடம் தெரிவித்தான்.

மத்தியப் பிரதேச முன்னாள் முதல்வர் சக்லேச்சாவையும கடத்த திட்டமிட்டு இருந்ததாக அவன் தெரிவித்தான்.

இந்தப் பெரும் கொள்ளைக்காரனைப் பிடித்தது டெல்லி போலீசாருக்கு பெரும் வெற்றியாகக் கருதப்படுகிறது.

# தமிழே வாழ்த்து!

★ பி. கண்ணன் ★
பி காம்., பி. எல்.

அன்னைத் தமிழே! உன்னை அகிலமே வியக்கச் செய்த எங்கள் அண்ணன் பொன்மனச் செம்மல் புரட்சித்தலைவரின் பெயரால் ஒரு மாபெரும் திருவிழா! சேலம்நகர் தன்னில் எழுச்சி விழா எடுக்கின்றோம்!

நிலையான புகழுக்குச் சொந்தக்காரரை நிலையான புகழுக்குச் சொந்தமான அன்னை தமிழே வாழ்த்த வருகின்றாள்! தன்னேரில்லாத தமிழ்க் குல மறவர்களே! தங்கத் தலைவனை வாழ்த்த வாருங்கள்!

செந்தமிழ் நாட்டோர் சேமமுற வாழட்டுமென்று சொந்தமாய் உழைத்து ஈட்டிய பொருளனைத்தையும் கொட்டிக் கொடுக்கின்ற கோமான்! குவலயத்தில் வாழ் வாங்கு வாழும் சீமான் பெயரால் மாநாடு கூட்டுகின்றோம்! தர்மமே மாசற்ற நாயகனை வாழ்த்திடும் காட்சியை மாசற்ற தொண்டர்களே காண வாருங்கள்!

செந்தாமரை மேனி அழகன், சிரிக்கும் சிரிப்போ முல்லைச்சரம்! தீங்கில்லா மனதிற்குச்சொந்தக்காரர். எங்கள் இதய தெய்வம் எம். ஜி. ஆரின்-பெயரால் மக்கள்சங்கமத்தைக்கூட்டுகின்றோம். நல்லிதயம் கொண்ட நல்லோரெல்லாம் நல்வாழ்த்துச் சொல்ல வருகின்றனர். நல்லிதயம் கொண்ட நங்கையரே! மகளிரே! நல்வாழ்த்துப்பாட வாருங்கள்!

தர்மத்தை முன்னே வைத்து—தாயின் ஆசியை உடன் வைத்து நியாயச் சக்கரத்தைச் சுழற்றிடும் நேர்மைநெஞ்சக்குச்சொந்தக்காரர், தர்மபுத்திரன், தளநாயகன் பெயரால் தமிழ்க்குலத்தின் எழுச்சிக் குரல் ஒலிக்கப் போகிறது!

தர்மத்தை நேசிக்கும் நல்லோரே தார்வேந்தனை வாழ்த்த வருகின்றனர். தொழில்கள் ஓங்கத்தோள் கொடுக்கும் தொழிலாளர் தோழர்களே! உழைப்பின் நாயகனை வாழ்த்த வாருங்கள்!

வீரத்தை வில்லாக்கி—விவேகத்தை கணையாக்கும் வீரமைந்தன் - யெங்கள் புரட்சித்தலைவன்பெயரால் -எடுக்கும் வீர உலாகண்டு, விவேகிகள் வாழ்த்த வருகின்றனர். விவேகத்தைப் பயிலும் மாணவர் பட்டாளங்களே! நீங்களும் வாழ்த்த வாருங்கள்!

## நல்லவர் இவர்...

நல்லோர் உலகில், "நல்லவர்" இவரென நாளும் பேசிடும் பாங்கினைப் பெற்ற நல்லவர் எம். ஜி. ஆர். பெயரில் மன்றத்து மாநாடு — குன்றம் சூழ் சேலத்தில் கூடுகின்ற பாங்கினைக்காண பண்பாளர்களே வருகின்றனர்! பாட்டுடைத் தலைவனைப் போற்ற மன்றத்து மறவர்களே! பீடு நடைபோட்டு வாருங்கள்!

திக்கெல்லாம் புகழ் சேர்க்கும் திராவிடத் தலைவன் பெயரால் தக்க தருணத்தில் விழா எடுக்கும் எழுச்சி காண திசையெல்லாம் தேன்சுரக்கும் மாம்பழத் திருநகர் நோக்கி, பாதையெல்லாம் சேலம் மாநாட்டுத்திடல் நோக்கி மாந்தர் நினைவெல்லாம் மாநாட்டு மாண்பை நோக்கி, அமிழ்தினும் இனிய வாழ்த்துக்களோடு அமைகின்றது. அமிழ்தினும் இனிய மனங்கொண்ட நாயகனை தமிழ் கூறும் நல்லுலகே!

நீயே திரண்டு வந்து வாழ்த்த வேண்டும்!

## சேலம் மாநாட்டிற்கு காரைக்கால் பகுதியிலிருந்து 500 பேர்

காரைக்கால், ஜூன் 12. சேலம் மாநாட்டிற்கு காரைக்கால் பகுதியிலிருந்து 500க்கும் மேற்பட்ட கழகத்தோழர்களும் மன்றத்தவர்களும் செல்லுவதாக, புதுவை மாநில கழக துணைச் செயலாளர் அமீதுசுல்தான் தெரிவித்துள்ளார்.

வழக்குகள் வாபஸ் ஆனாலும்



# மக்கள் மன்றத்திற்கு கருணாநிதி பதில் கூறியே ஆகவேண்டும்

## அமைச்சர் கே. ஏ. கே. பேச்சு

**சென்னை, ஜூன் 12.. நீதிமன்றத்தில் இருந்து வழக்குகள் வாபஸ் பெற்றதற்காக கருணாநிதி தற்காலிக மகிழ்ச்சியடையலாம். ஆனால் மக்கள் மன்றத்திற்கு அவர் பதில் கூறியே ஆகவேண்டும் என அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.**

சென்னை 107-வது வட்டம், ராமநாயக்கன் தெருவில் பிரும்மாண்டமான கழகப் பொதுக் கூட்டம் நடந்தது.

கூட்டத்திற்கு அமைச்சர் கே.ஏ.கே. தலைமை வகித்துப் பேசினார். பா. அங்கமுத்து முன்னிலை வகித்தார். கிருஷ்ணமூர்த்தி ஆறுமுகம் ஆகியோர் வரவேற்றுப் பேசினார்கள்.

அமைச்சர் குழந்தைவேலு, கு.க. செல்வம், புரட்சிமணி, ஆரோக்கியதாஸ், வழக்கறிஞர் சலீம் டேவிட், கண்ணதாசன், கே.வி. ரமணி, முனுசாமி தட்சிணாமூர்த்தி ஆகியோர் பேசினர். வேங்கப்பன் நன்றி கூறினார்.

காஞ்சி அண்ணாதாசன், டேப் விந்தன் கலைநிகழ்ச்சிகளும் நடந்தன.

அமைச்சர் கே. ஏ. கே. பேசுகையில்கூறியதாவது:-

ஜூன் 9-ந் தேதி தமிழக வரலாற்றில் மிகச் சிறப்பான நாள். இந்த நாளில் தான் நம் இனிய தலைவர் புரட்சித் தலைவர் 10.வது முதல்வராக - இரண்டாம் முறையாக உங்கள் ஆதரவோடு முதல்வராக வந்த நாள். அந்த நாளை இங்கே சிறப்பாக கொண்டாடுகிறார்கள்.

இந்ததொகுதியில்இன்று காலை முதல் பல்வேறு காரியங்கள் நடந்தன. கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் 64 சோடியம் ஆவி விளக்குகளும், எல்டாம்ஸ் சாலை ஆழ்வார்பேட்டையில் 46 சோடியம்ஆவிவிளக்குகளும் ஆக மொத்தம் ஏறத்தாழ 110 சோடியம்ஆவிவிளக்குகளை பொருத்தும் வாய்ப்பு பெற்று வந்துள்ளேன்.

### நன்றி

இந்த தொகுதிக்குமுதல்வர் புரட்சித்தலைவர் 11 லட்சம் ரூபாய் ஒதுக்கி பல காரியங்களை செய்து வருகிறார்.

இதனால் ஆயிரக்கணக்கான மக்கள் சார்பில் முதல்வருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆயிரம் விளக்கு பகுதியை ஒட்டிய கொச்சி அவுசில் 3000 போலீசார் குடியிருக்கின்றனர். இன்று காலை 6 மணியிலிருந்து இரவு 9 மணி வரை அங்கே இலவசமருத்துவ சிகிச்சை முகாம் நடந்து வந்தது. அதை ஏற்பாடு செய்தவர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழக அரசியலில் சிலர் பீதியை உருவாக்கப்பார்க்கின்றனர். 18-ந்தேதி பெரிய திருப்புமுனை உருவாகும் என்று பேசி வருகின்றனர்.

### ஓடி ஒளிந்தனர்

சென்றஆண்டு மேமாதம் என்ன ஆருடம்கணித்தார்கள். பின்னர் ஜூன் முதல் தேதிக்கு என்ன நிலைமை ஏற்பட்டது? ஆருடம் கணித்தவர்கள் எல்லாம் ஓடி மறைந்தனர்

இப்போதும் ஜூன் 18ந் தேதிக்கு பிறகு அவர்கள் ஓட இருக்கிறார்கள். சென்ற தேர்தலைவிட அறைகூவல் இருக்க முடியாது. இரண்டரை ஆண்டு கால ஆட்சியை எந்த முகாந்திரமும் இல்லாது கலைத்தார்கள் இனி அனைத்திந்திய அண்ணா திமுகவிற்கு செல்வாக்கு இல்லை. அது கோட்டைக்கு செல்லாது என்றெல்லாம் ஆருடம் கணித்தார்கள்.

இடையில் 112 நாட்களுக்கு பிறகு மீண்டும் முதல்வர், புரட்சித்தலைவர் கோட்டைக்குச் சென்றார்.

77-ம் ஆண்டு நடந்த தேர்தலில்நமக்குகிடைத்த வாக்குகள் 52 லட்சம். இதனையும் சொல்லிய பிறகு 80-ம் ஆண்டு தேர்தலில் நமக்குகிடைத்தவாக்குகள் 72 லட்சம்.

72 லட்சம் வாக்குகளை நீங்கள் அளித்து மீண்டும் கோட்டைக்கு அனுப்பியுள்ளீர்கள்.

இந்த பாடத்தை அவர்கள் மறந்து இருப்பார்கள் என்று நான் நினைக்கவில்லை. சென்ற தேர்தல் முடிவினை அவ்வளவு எளிதில் மறந்து இருப்பார்களா?

72 லட்சம் மக்களின் அனுமதியோடு இந்த ஆட்சி நடந்து வருகிறது. பல பெரிய பெரிய காரியங்களை நாங்கள் செய்திருக்கிறோம். 120 விளக்குகளை இந்த தொகுதியில் போட்டிருக்கிறோம். 75 நாட்கள் நடந்த சட்டமன்ற கூட்டத் தொடரில் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு பதில் சொன்னோம்.

'கலைப்போம்; கலைப்போம்' என்கிறீர்களேஎன்ன காரணம் இருக்கிறது?

கருணாநிதி சென்ற தேர்தலில் என்ன என்னசொன்னார்? கருணாநிதிதான்முதல்வர் என்றார்கள். சொன்னது யார்? இன்றைய தினம் பிரதமராக வீற்றிருப்பவர்கள்.

அவர் சொன்ன பிறகும் நாட்டு மக்கள் என்னதீர்ப்பினை வழங்கினார்கள்?

இந்திரா சொன்னாலும் எங்கள் வாக்கு புரட்சித் தலைவருக்குத்தான் என்று உறுதி அளித்தனர்.

இது இந்திராவுக்கு தெரியாதா? அந்த கசப்பான உணர்வுகளை மறந்திருப்பார்களா?

### முதல்வர் கருத்து

உதகையில் முதல்வர் தெளிவாக கருத்துக்களை கூறியிருக்கிறார். 'பொறுப்புகள் எங்களை தேடிவந்தன. நாங்களாக பொறுப்புகளை நாடி ஓடவில்லை' என்று தெளிவாக சொல்லியிருக்கிறார்.

வழக்கறிஞர் சலீம்கருணாநிதி மீதான ஊழல் வழக்குகள் வாபஸ் பற்றி பேசினார்.

இந்த வழக்குகளை யார் போட்டது. சி.பி.ஐ.போலீசார். இப்படி வழக்குகளை வாபஸ் பெற்றால் எதிர்காலத்தில் எப்படி நம்பிக்கை வரும்?

கருணாநிதி இதற்காக தற்காலிகமாக மகிழ்ச்சியாக இருக்கலாம். அவர் நீதி மன்றத்திலிருந்துதப்பி இருக்கலாம். ஆனால மக்களின் தர்ம தண்டனையிலிருந்து தப்பவில்லை. அவர் மக்களமன்றத்துக்குவந்தே தீர வேண்டும்

நீதிமன்றத்தில் தான் அவர் விடுதலை பெற்றுள்ளார். மக்கள் மன்றத்தில் இன்னும்குற்றவாளியாகத் தான் உள்ளார்.

### மக்கள் கேட்பார்களா? இல்லையா?

அவர் ஆயிரம் விளக்குத் தொகுதிக்கு வந்தால் மக்கள்கேட்கமாட்டார்களா? கோதுமை பேரத்தில் 5 லட்சம்ரூபாய் கையூட்டு வாங்கினார் என்று சி.பி.ஐ. சொல்லியிருக்கிறது.

அது அந்த வழக்குகளை திருப்பிப் பெற்றுக்கொண்டது ஏன்? அவர்நிரபராதி என்றால் வழக்குபோட்டது ஏன்? மக்கள் கேட்கமாட்டார்களா?

இவ்வாறு அமைச்சர் கே. ஏ. கே. கூறினார்.





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029
Editor: E. PARASURAMAN



# புரட்சித்தலைவர்
# எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டு சிறப்பிதழ்

## மன்றத்தின் முதல் தொண்டர் முசிறி



சரித்திர நாயகன் பெயரால் மன்றம் அமைத்து நாட்டின் சரித்திரத்தை மாற்றிக்காட்டிய சாதனை வீரர்கள் சேலத்தில் கூடுகிறார்கள்!

புரட்சித்தலைவர்எம்.ஜி. ஆர். மன்றத்து மாநாடு சேலத்தில். தலைமைத் தாங்குகிறவர் முசிறிப்புத்தன். மன்றத்து முதல்தொண்டர். பொதுவாழ்வில் புயல் வீசினாலும், தென்றல் வீசினாலும்நிழல்போலபுரட்சித் தலைவரை பின் தொடரும் இருபதாம் நூற்றாண்டு அனுமன்.

புரட்சித்தலைவர் பங்கேற்ற 1953 லால்குடி மாநாடு முதல், இன்று வரை இயக்கத்துக்கு வரலாற்றுப் பெருமையை உருவாக்கியவர்.

### இதய தெய்வம்

நடிப்பிசைப் புலவரை தலைவராகக் கொண்டு 1969 முதல் இயங்கத் தொடங்கிய இந்த மன்றம் 71 தேர்தலில் ஆற்றிய பணிகள் அன்றைய எதிரிகளைக் கலங்க அடித்து வெற்றிக் கனியை இயக்கத்துக்கு தேடித்தந்தது!

புரட்சித் தலைவரை வெளியேற்றிய அந்த 72 அக்டோபர் முதல் இன்று வரை - மன்றம் என்பது பயன் கருதாப்படை என்று நிரூபித்துக் காட்டியவா முசிறி. சட்ட மன்ற உறுப்பினர். விழுப்புண் ஏற்றவீரர்.

அத்தகைய முதல் தொண்டர் சேலம் மாநாட்டுக்கு தலைவர்.

புரட்சித் தலைவரை இதய தெய்வமாக ஏற்று அல்லும் பகலும் வழிப்படும் மதுரை இளவரசன் மன்றத்து இளைஞரின் எழுச்சி வடிவம்.

புரட்சித்தலைவரின்புகழை பரப்புவதையே வாழ்நாளின் கடமையாகக் கொண்டவர் கடலூர் ஜனார்த்தனம்.

### அண்ணாவின் தம்பி

"அண்ணாவின் தம்பி புரட்சித்தலைவர் தான்" என்று குன்றுபோல் நின்று கொள்கை முழக்கம் செய்தமைக்காக ஓராயிரம்முள் நிறைந்த புதரில் தள்ளப்பட்டு, கால்கள் வெட்டப்பட்டு, தியாகத்துக்கு புதுச் சரிதம் படைத்த மான மறவன் மானாமதுரை ராசேந்திரன்.

இந்த ஆற்றல் மறவர்கள் மன்றத்து சேனாதிபதிகள்- செயல்வீரர்களின் செவிக்கு விருந்தும் - கண்ணுக்கு காட்சியும் — உணர்வுக்கு புது வடிவமும் சேலத்தில வழங்க இருக்கிறார்கள்!

பொங்கும் — புனலென- பகைபொசுக்கும்கனலென
கொடியோடு
படையோடு
கொள்கை முழக்கோடு
கூடுவோம்
சேலத்தில்.

- மெய்க்கீர்த்தி

## சிட்டென பறந்துவா சேலம் நோக்கியே!

'தனக்கென வாழான்; தலைவருக் காக
வனம்புகத் தயங்கான்! வள்ளலைக் காத்திட
தன்னுயிர் நல்கிடும் தகைமை யாளன்'
என்ற தியாக இலக்கணம் உடைய
மன்ற மறவனே! மார்புக் கவசமே!
சென்று என்றால் வென்று வாகை
சூடிடும் வீரனே! சூழ்ந்து வரும் பகை
ஓடிடத் திண்தோள் உயர்த்திடும் தீரனே!
விழுப்புண் நிறைந்த வேங்கை மார்பனே
கழகத் தாயின் கண்ணின் மணியே!
மக்கள் திலகம் நெற்றியில் இட்ட
வெற்றித் திலகமே! வில்லேருழவனே!
புறப்புண் காணா புலியின் போத்தே!
புறநா னூற்றுப் புகழைக் குவித்துச்
சரித்திரம் காணா சாதனை படைக்கும்
புரட்சித் தலைவரின் போர்ப்படை முரசமே!
அரசியல் பிழைத்தார்க்கு அறநெறி கூறும்
உரைசால் தொண்டனே உடனே விரைந்திடு!
தீம்பலா மொழியில் திருப்புகழ் இசைக்கும்
மாம்பழ நகரில் மாநாடு காண்போம்!
கோல மிகுந்த குன்று சூழ் அரங்கில்
சாலச் சிறந்த சேலமா நகரில்
பாடிவீ டமைத்துப் பரணி பாடிட
கூடிடுவோம்; வா! கொள்கைக்குன்றமே!
சத்தியத் தாய்மகிழ் சான்றோ னாக
முத்தமிழ்த் தாய் புகழ் முதல்வ ராக
தென்புலம் காக்கும் திருவளர் செல்வன்
பொன் மனம் கொண்ட தமிழ்மணச் செம்மலோர்
கடைக்கண் மட்டும் காட்டிவிட்டால்
தடைக்கல் யாவையும் தூள்தூள் ஆக்கிடும்
படைக்கலம் நீயே! பசிப்பிணி போக்கிடும்
கொடைக்கரம் ஏற்றிய குத்துவிளக்கே!
இதயதெய்வம் இடும்பணி என்றால்,
இமயமும் துரும்பென எண்ணிடும் வேழமே!
சிங்க ஏறென செயல்படும் தோழனே!
கங்கை ஆறென; காவிரிப் பெருக்கென
ஆர்த்தெழும் பெருங்கடல் அலையெனப் புறப்படு!
பார்க்குழாம் சிறிது; நம் படைக்குழாம் பெரிதே!
இப்படை தோற்கின் எப்படை வெல்லும்?
ஒப்பிலா அறிஞராம் ஒண்டமிழ் அண்ணனின்
பட்டறைவாளே! பாசறை அழைக்குது
சிட்டெனப் பறந்துவா சேலம் நோக்கியே!

- புலவர் சோமுசா எம். ஏ. பி. ஓ. எல்.

## வள்ளலுக்கு விழா- வெள்ளமென கூடு

இருபதாம் நூற்றாண்டில் தமிழகம் கண்ட ஒரு ஒப்பற்ற மாந்தருள் மணிவிளக்காம் புரட்சித் தலைவர்.

அவர்
ஒரு கலைஞர்.
ஒரு மக்கள் சக்தியின் நாயகர்
ஒரு அரசியல் வித்தகர்.
ஒரு குடும்பத்தலைவன்.
ஒரு பேரியக்கத்தின் தோற்றுவாய்.
ஒரு தத்துவச் சிற்பி.
ஒரு சிறந்ததொண்டன்.

இந்த ஏழு தலைப்புகளும் ஏழுகடல் ஆகும். அந்த கடலின் கரை கடந்த மனிதர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். ஆவார். இந்த உலகத்தில் எந்த தனிமனிதன் பெயராலும் இத்தனை மன்றங்கள் உண்டா?

இல்லை என்ற பதில் விண்ணைமுட்டும். ஒரு மனிதன் பதவியில் இருக்கும் நேரம்.

பலர் வருவர்.
புகழ்மாலை சூடுவர்.

மன்றங்கள் அமைப்பர், தூக்கிவைத்துக் கூத்தாடுவர். இதுதான் சாதாரணமாக இந்த உலக சரித்திரதின் எந்தப்பக்கத்தைப் புரட்டினாலும் காணப்படும்.

ஆனால்இவருக்கோஇந்த நியதியில் மிகப்பெரிய மாற்றம். அவர் ஒரு நடிகராகயிருந்தபோதே, பலர் கூடினர் புகழ்மாலைகளை பாமாலைகளாக புனைந்தனர்! மன்றங்கள் திறந்தனர்.

காரணம் —
புரட்சித் தலைவரும் தமிழகமக்களுக்கும் உள்ள உறவு —

மேகத்திற்கும் பூமிக்கும் உள்ள உறவு.

### இதயத்துக் கனி

தான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம், இது தான்துறவிகளின்வாசகம்.

தான் பெற்ற செல்வம் பெருக இவ்வையகம், இது தான் புரட்சித்தலைவரின் எண்ணம்.

இந்த எண்ணத்தின் விளக்கஉரைதான்புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர்!

தமிழ்மக்களின் வாழ்வில்உணர்வால் கருத்தால்- உள்ளத்தால் இரண்டறக் கலந்து தமிழர்தம் ஏற்றத்திற்கும் தமிழ்நாட்டின் எழுச்சிக்கும். தமிழ் மக்களின பெருவாழ்வுக்கும் சுயமரியாதை உணர்வால் அரசியல் மறுமலர்ச்சி கண்ட மாமேதை

"பேரறிஞர் அண்ணா" அவரின் வாரிசு பலர்! அதில் அவரின் இதயத்துக் கனியாய் தமிழ்மக்களில் உள்ளத்துக்கனியாய்நின்றவர்- நிற்பவர்-என்றும் நிற்பவர்-

புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர்.- அழுந்திக் கிடந்தோர் தம்மை தட்டி எழுப்பி வளர்ந்தவர். வாழ்வில் ஒரு ஒளிகாட்டி அடங்கி முடங்கி கிடந்தோரை சிந்திக்க வைத்தவர்- தன்மான உணர்வூட்டிய சுயமரியாதைச்சிங்கம் தந்தை பெரியாரின் வழி நடக்கும் செம்மல்.

தாழ்த்தப்பட்டோர்வாழ்வுக்கு ஓர் கலங்கரை விளக்கம். விவசாய பெருங்குடி மக்களின் துயர் களைந்த விடிவெள்ளி, நீதிக்குத்தலை வணங்கி நிலையான நல்லாட்சிதனை தமிழகத்திற்குத் தந்த செம்மல் புரட்சித்தலைவர்.

### ஓர் உருவாய்..

கொடிக்குதேர்த்தந்தான் பாரி ஔவைக்கு நெல்லிக் கனித்தந்தான் அதியமான். மயிலுக்குப்போர்வை ஈந்தான்- பேகன். இத்தனை தானா? இன்னும் எத்தனையோ வள்ளல்கள், இவர்களை நாம் கண்டோம் இல்லை.

ஆனால்—
இத்தனை பேரின் ஒத்த ஓர் உருவமாய் இன்று இருப்பவர் புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர்.

புரட்சித்தலைவரின் பெயரால் மன்றங்கள் ஒன்றல்ல இரண்டல்ல, பலலாயிரம் மன்றங்கள் அனைத்து உலகத்திலும். எனவேதான்இவருக்கு என்று இருக்கும் அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம். அந்த மன்றத்தில் உள்ளோர்!

இளமை சிங்கங்கள்-பணியாற்றுவதில் நிகரற்றவர்கள். தலைவரின் விழி அசைவுக்கும் விரல் அசைவுக்கும் ஏங்கிக் கிடக்கும்நல்ல நெஞ்சங்கள். எதையும் தாங்கும் செஞ்சத்திற்கு, எடுத்துக்காட்டாய்எவருக்கும் எந்த ஆணைக்கும் அஞ்சாது, எடுத்ததைதொடுத்து முடித்து மக்கள் நலன்காக்கும்காவல்காரன் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். அந்த மன்ற மாசில்லா நெஞ்சங்கள்எடுக்கும்விழா தான் சேலத்தில் 13.14 தேதிகளில் கூடும். எம். ஜி. ஆர். மன்றமாநாடுமாநாட்டின் எழிலை-எழுச்சியை அணிவகுப்பை - எடுத்துரைத்திட ஆயிர நாவு படைத்த ஆதிசேசனாலும் இயலாது. த்தரணிபோற்றும் விழாவின் சிறப்பை காவியமாக பாடிட கம்பனில்லை —
பரணியாக பாடிட



ஜெயங்கொண்டார் இல்லை—

இத்தனையும் நேரில் கண்டால் தான் மன்றத்து மறவனின் நெஞ்சாறும்.

கண்படைத்த பயனை பெற வேண்டுமானால் சேலத்தில் மன்ற மறவர் கூடும் மாட்சியைக் காண வேண்டும்.

காணத்தவறினால்!
அந்த புரட்சித்தலைவரின் மாநாட்டை காணாத கண்ணும் ஒரு கண்ணா?
என்றுதான் எண்ணுவர்.
எனவே

நாள் நெருங்கி விட்டது. நாடு போற்றும் தலைவனின் பெருமையைமாற்றார் உணரும் நாள்! புரட்சித் தலைவர் பின்னால் உள்ளவர் எண்ணிக்கை எண்ணிலடங்காது என்று கூறும் நாள். மக்கள் சக்திதான் புரட்சித் தலைவர் அவரின்றி கழகம் இல்லை என்பதை உணர்த்தும் நாள்!

### லட்சியத்தை முழங்கிட...

அந்த நாள் தான் ஜூன் 13, 14 புறப்படு வில்லில் இருந்து விடுபட்ட அம்பென புறப்படு. முழக்கிடும் புரட்சித்தலைவரின் இலட்சியத்தை முழங்கிடு கூடிடு. சேலம் மாநகரத்தில் அலை,அலையாய் கூடிடு. குடும்பம் குடும்பமாய் கூடிடு.

நம் அணிவகுப்புகடமை கண்ணியம் கட்டுப்பாடு மிக்கதுஎன்பதை. உணர்த்திட மக்கள் படைதிரட்டு.
சேலத்திற்கு வந்திடு!
பெருமையை சேர்த்திடு!
உன் பங்கை செய்திடு!!

திருச்சி
சௌந்திரராசன்
பொதுச் செயலாளர்
அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம்



# புறப்படு! புறப்படு! புறப்படடா!

—: கவிஞர் மணிமொழி :—

புறப்படு! புறப்படு! புறப்படடா!
புரட்சியின் வடிவே புறப்படடா!
மறக்குல மணியே புறப்படடா!
மணித்தமிழ் மகனே புறப்படடா!...
காலத்தேவியின் கருணையினால்
கனிந்து வந்தவன் நம் தலைவன்
ஞாலத்திருக்கும் மானிடரில்
நல்லவன் வல்லவன் நாயகனே
கோலத் தமிழால் வாழ்த்திடுவோம்
கொள்கை நெறியைக் காத்திடுவோம்!
சேலத்தில் அமைந்தது மாநாடு
செல்வோம் வா வா விரைவோடு!
(புறப்படு...புறப்படு)

சேலொத்த விழியின் மனையாட்டி
சோதரர் சோதரி துணைகூட்டி
பாலொத்த மழலைச்செல்வமுடன்
படை படையாய் நீ புறப்படுவாய்!
சிலத் தலைவனும் வருகின்றார்
சேர்ந்துள அமைச்சரும் வருகின்றார்
ஆலம் விழுதாம் தலைவர்களும்
அணி வகுத்தேதான் விரைகின்றார்...!
(புறப்படு! புறப்படு)

சூழ்ச்சிகள் செய்வோர் விரண்டோட
சூதுமதியினர் மிரண்டோட
காழ்ச்சிந்தை யாளர் வெறுத்தோட
கால் கை கண்கள் தெறித்தோட
ஆட்சித்தலைவனின் புகழ் பாட
அன்னவன் மணிக்கொடி விண்ணாட
மாட்சிமை நமக்கு தினம் கூட
மாங்கனி பூமியில் எழில் சேர...
(புறப்படு! புறப்படு)

சிங்களம் சாவகம் வென்றவனே
சீனமும் யவனம் கண்டவனே
கங்கைக் கரையிலும் நின்றவனே
கலிங்கம் கடந்தும் சென்றவனே
எங்கும் தமிழ்க்கொடி நட்டவனே
இடையில் மட்டும் கெட்டவனே
பொங்கும் அலையாய் புறப்படடா
புது வரலாற்றை படைத்திடடா...
(புறப்படு! புறப்படு)

மானத்தலைவன் வந்திடுவார்,
மாணிக்க மொழிகள் தந்திடுவார்
ஞானச்செல்வரும் வருகின்றார்
நல்லுரை அமுதம் பொழிகின்றார்
வீணைத்தமிழை நாவெடுத்தே
மீட்டும் நாவலர் வருகின்றார்!
வீணரை விரட்டு குரலெடுத்தே
பொதுச்செயலாளரும் வருகின்றார்!
ஆணைகள் கேட்போம் வா! வா! வா!
அறிவுரை பெறுவோம் வா! வா! வா!
சேனைகள் எதிர்க்க வந்திடுமோ?
சிறு நரி நம்மையும் முந்திடுமோ!
தானைத்தளபதி இருக்கின்றார்
தடந்தோள் வீரர்கள் துடிக்கின்றார்!
மானத்தமிழும் இருக்கின்றாள்!
மாற்றார் மண்ணில் கிடக்கின்றார்...
(புறப்படு! புறப்படு!)

வஞ்சக நரிகளின் வாலாட்டம்
வம்பு வீணரின் கோலாட்டம்
நஞ்சு மனத்தவர் போராட்டம்
நாச நினைப்பினர் சதிராட்டம்
பஞ்சாய் ஆக்கிக் காட்டிடுவோம்
பகையைப் புகையாய் ஓட்டிடுவோம்
நெஞ்சே நினைவே வா வா வா!
நெருப்பின் பொறியே வா! வா! வா!
தன்னலம் மறந்து உழைப்பவனை
தமிழ்நல மெண்ணிக் கிடப்பவனை
கண்மணித் தமிழரைக் காப்பவனை
காரிருள் ஒழித்தொளி சேர்ப்பவனை
மண்ணலம் காக்கத் துடிப்பவனை
மனிதருள் தெய்வத் திருமகனை
கண்ணியம் கடமை நினைப்பவனை
காஞ்சித் தேவன் வடிவினனை
எதிர்க்கும் பகையைத் தூளென்போம்
எதிர்ப்போர் எண்ணம் வீணென்போம்!
புதர்க்குப் பதுங்கும் புலிநாங்கள்
புரட்சித் தலைவன் வழிநாங்கள்
குதிக்கும் ஒநாய்க்கூட்ட மெனில்
கூர்கூராக்கிப் போட்டிடுவோம்!
சதிக்குத் துணையாய் இருப்போரைச்
சாய்த்தே வீரம் காட்டிடுவோம்!
— (புறப்படு! புறப்படு...)

கதிரின் ஒளியே வா வா வா!
கடலின் முத்தே வா வா வா!
மதியின் குளிரே வா வா வா!
மலரின் மணமே வா வா வா!
அதிரும் முரசே வா வா வா!
அறிவுப் பிழம்பே வா வா வா!
நதியின் புனலே வா வா வா!
நாடித் துடிப்பே வா வா வா!
— (புறப்படு! புறப்படு...)

அண்ணன் வளர்த்த சேனையதன்
ஆற்றல் மறவ வா வா வா!
அண்ணனின் கொள்கை போற்றிடவே
அணிவகுப்போம் நாம் வா வா வா!
மண்ணின் உரிமை காத்திடவும்
மாநிலப் பெருமை பூத்திடவும்
கண்ணின் மணியே வா வா வா!
கடமை அழைக்குது வா வா வா!
வண்ணத் தமிழே வா வா வா!
வாளின் முனையே வா வா வா!
எண்ணித் தினமும் மகிழ்ந்திடவே
எழுச்சியின் வடிவே வா வா வா!
மண்ணில் விண்மீன் குவிந்ததுபோல்
மலர்முகங் காட்டிட வா வா வா!
கண்ணில் தெரியுது சேலமடா
காற்றாய் விரைந்து வா! வா! வா!

# சேலம் நோக்கி திரளும் கழக மறவர்கள்

**சென்னை, ஜூன் 12-சேலத்து மன்ற மாநாட்டிற்கு தமிழகத்தின் பட்டி தொட்டிகளில் இருந்தெல்லாம் விசேஷ பஸ்களில்கழகத்தவர்களும், மன்ற மறவர்களும் அணி திரளுகிறார்கள்.**

குடியத்தாத்தில்இருந்து மக்கள் நல்வாழ்வு எம்.ஜி. ஆர். மன்ற செயலாளர் துரை முருகேசன் தலைமையில் 150 பேர் சேலத்து மாநாட்டிற்குச் செல்லுகிறார்கள்.

## அண்ணா ஜோதி

திருச்சி நகர எம். ஜி. ஆர். நூலகத்தின் சார்பில் சேலம் மாவட்ட எம்.ஜி. ஆர்-மன்ற மாநாட்டிற்கு தொடர்ஓட்டமாக அண்ணா சிலையிலிருந்து அண்ணா ஜோதி எடுத்துச் செல்லப படுகிறது. 13ம் தேதி சனி மாலை 7 மணியளவில் தமிழக முதல்வர் புரட்சித் தலைவரிடம் அண்ணா ஜோதி வழங்கப்படுகிறது.

## சேலம் நோக்கி திருச்சி

அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றத்தின் சார்பாக புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர் மன்றமாநாடு சேலம் மாநகரில் நடைபெறஉள்ளது தெரிந்ததே. திருச்சி மாவட்டம் முழுவதும் இருந்து ஆயிரக் கணக்கான கழக தோழர்கள் மாநாட்டிற்கு செல்லுகின்றனர். கரூர் மாநகரில் இருந்து மாவட்ட செயலாளர் பாலகிருஷ்ணன், கரூர் தொகுதி சட்டமன்றஉறுப்பினர் எம். சின்னச்சாமி தலைமையில் பத்து பஸ்களிலும், ஐந்து வேன்களிலும் தொண்டர்கள் செல்கின்றனர். அதுமட்டுமின்றி தமிழக அரசின் சாதனைகளை விளக்கும் அலங்கார வண்டிகளும் செல்லுகின்றன.

இதற்கான ஏற்பாடுகளை வெகு தீவிரமான முறையில், திருவள்ளுவர் சொஸைட்டியின் தலைவர் வேலாயுதம், நகர அவைத் தலைவர் இராமதுரை நகர துணைச் செயலாளர் சிவசாமி, நகர பொருளாளர் மாரப்பன் மாவட்ட பிரதிநிதி கே. முஸ்தபா, மாவட்ட மாணவர் இணை அமைப்பாளர் எம். ஆறுமுகம் கரூர் தொகுதி மாணவர் அமைப்பாளர் எஸ், நாகராஜன் ஆகியோரும் கழக பிரமுகர்கள் மணி, பெரியசாமி நீலகண்டன் ஆகியோரும் ஏற்பாடு செய்து வருகின்றனர்.

## அரும்பாக்கம்

சேலம் மாநாட்டிற்கு 77-வதுவட்ட கழக செயலாளர் வெங்கடேசன் தலைமையில், 50 பேர் மாநாட்டிற்குச் பஸ்கள் மூலம் செல்லுகிறார்கள்.

## குமரி மாவட்ட மாணவர்கள்

சேலத்தில் நடக்கும் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். மன்ற மாநாட்டில் கலந்து கொள்ள குமரி மாவட்ட கழக மாணவர்கள் மாவட்ட மாணவர் அமைப்பாளர் அ.செல்வின் குமார் தலைமையில் தனிப் பேருந்துகளில் செல்கின்றனர்.

மாணவர் பிரிவுத் தோழர்கள் பன்னீர்செல்வம், ஆரல் கோபால், கே. சி. மதியழகன், ராமகிருஷ்ணன், செல்வ குமார்.சாம் ஆலன் ஆகியோர் உள்பட திரளான மாணவர்கள் செல்கின்றனர்.

# மன்றத்து மறவர்களின் மாட்சி!



**வை. பெருமாள் பி. ஏ.**

சேலம் திருநகரில் "புரட்சித்தலைவர் எம்.ஜி ஆர். மன்ற மாநாடு! "மன்றத்து மாநாடு" என்று சொல்லுகின்ற நேரத்திலே உள்ளத்தில் வார்த்தைகளால் சொல்ல முடியாத ஒரு உணர்ச்சி பிறக்கிறது.

எங்களைப் போன்றவர்களுக்கெல்லாம் "புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றம்" என்றால் அன்றும் இன்றும், என்றும் பிரிக்க முடியாத ஒரு பாசப் பிணைப்பு உண்டு. மன்றத்தின் மூலமாக அரசியலுக்கு வந்தவர்கள் என்றும் மன்றதிலிருந்து விலகிவிட இயலாது. என்றுமே மன்றத்தின் அங்கம்தான்.

அன்பின் ஆழ்கடலாய், பண்பின் பாசறையில், பகுத்தறிவின் பாதுகாவலராய் விளங்குகின்ற புரட்சித்தலைவரின் புகழினை அழித்திடவும், அண்ணாவின் கொள்கைகளைக் குழி தோண்டிப் புதைத்திடவும், அன்று ஆட்சியிலிருந்த கருணாநிதி முயற்சித்த நேரத்தில் மன்றத்து மறவர்கள் கிஞ்சிற்றும் அஞ்சாது சிலிர்த்தெழுந்த காட்சியினை நாடு மறந்திருக்க நியாயமில்லை.

இருப்பினும் மறந்து விட்ட நயவஞ்சகக் கூட்டத்திற்கு சேலத்து மாநாடு சிறப்புற எடுத்துக் காட்டும் என்பதில் எள் முனையளவும் சந்தேகமேஇல்லை.

புரட்சித்தலைவர் வழி நின்று அண்ணாவின் கொள்கைகளை ஆரம்ப காலம் தொட்டு அயராது அழகாக எடுத்துச்சொல்லி அரியணை ஏற்றிய பெருமையும், அவற்றைச் கட்டிக் காக்கின்ற கடமை உணர்வுமிக்க வீரர்கள் என்கின்ற பெருமையும் நமது மன்றத்து மறவர் பட்டாளத்துக்குண்டு.

அண்ணாவின் கொள்கையினை அழிக்க நினைக்கின்றவர்களை அடையாளம் தெரியாது ஆக்கிடும் வலிமையும் நமக்குண்டு.

1972 அக்டோபர் திங்களில் புரட்சித்தலைவர் தொடங்கிய தர்ம யுத்தத்தில் ஆதிக்க வெறியர்களால் இழைக்கப்பட்ட எண்ணற்ற கொடுமைகளை உறுதியாக எதிர்த்து நின்று மலை குலைந்தாலும் நிலை குலையாத நெஞ்சம் கொண்டவர்கள் நாம் என்பதை நிரூபித்தது புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர் மன்றங்களின் இலட்சியப்படையே.

அன்று அதிகாரவர்க்கத்தால் அடுக்கடுக்கான வழக்குகள் அணிவகுத்து வந்த போதும், அஞ்சாது நின்று வெஞ்சமர்புரிந்தது ஆற்றல்மிக்க மன்றத்து பெரும்படையே.

அதிகாரத்தைக் கண்டு அஞ்சி நடுங்காமல் போலீசைக்கண்டு பயந்து பதறாமல், சிறைச் சாலையைக் கண்டு சிதறி ஓடாமல், விண்ணையும் சாடிவரும் வீரம் பெற்றவர்கள் என்பதை நிரூபித்ததோடு, பணத்திற்கும், பதவிக்கும் பல்லை இளிக்காத சுகபோகத்தைகண்டு சுருண்டு வீழாத உண்மையான இலட்சியவாதிகள் புரட்சித்தலைவரின் அன்புத்தம்பிகள் என்பதை உலகுக்கு உணர்த்தியது. உழைப்பால் உயர்ந்தவரின் ஒப்பற்ற பெரும்படையே.

1972ல் அண்ணாவின் இதயக்கனி புரட்சித்தலைவர் அவர்களின் அதிகாரம் கையிலிருக்கிறது என்ற ஒரே தைரியத்தில் தூக்கி எரிந்துவிட்டேன் என்று சொன்னவர்கள் ஆடாமல், அசையாமல்—

வீட்டிற்குள் அடங்கிக் கிடந்த காட்சியையும், புரட்சித்தலைவரின் படத்தினை ஒட்டாமல், புரட்சித்தலைவரை வாழ்க என்று சொல்லாமல் தமிழகத்தின் எந்தப் பகுதியிலும் யாரும் நடமாட முடியாது என்ற நிலை இருந்ததையும்மறந்துவிட்டு ஏதோ ஒருமயக்க நிலையில் சிலர்ஆர்ப்பாட்ட அரசியல் நடத்திக் கொண்டிருக்கிறார்கள். அத்தகையவர்களுக்கு நாங்கள் சோர்ந்து விடவில்லை, அயர்ந்து விடவில்லைதுவண்டு விடவில்லை என்பதையும், நாங்கள் மலையினையும்நொறுக்கி மாவாக ஆக்கி நிலையான வெற்றிகாணும் நெஞ்சுரம் கொண்டவர்கள், புரட்சித்தலைவருக்காக என்றும், எப்போதும் எந்தத் தியாகத்திற்கும் தயாராகஇருக்கிறோம், என்பதையும் சேலத்து மாநாட்டு மூலம் உணர வேண்டியவர்களுக்கெல்லாம் உணர்த்திடுவோம்.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

செயலாளர் ரத்தினராம கிருஷ்ணன் கூறியுள்ளார்.

## திருப்பத்தூர்

திருப்பத்தூர் 14-வது வட்டத்திலுள்ள புரட்சித்தலைவர் எம்.ஜி.ஆர்.மன்ற ஆலோசனைக் கூட்டம் மன்றத்தலைவர் டாக்டர் தி.பு. பொய்கைநாதன் தலைமையில் நடந்தது.

சேலத்தில் நடக்கும் மன்ற நாநாட்டிற்கு மன்றத் தோழர்கள் குடும்பம் குடும்பமாக சென்று பங்கேற்பது என்று கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. டி. ஜி. சேகர் நன்றி கூறினார்.

## சேலம் நோக்கி மறவர்படை

பவானிசாகர், ஜூன் 12—

சேலம் மாநாட்டில் ஆயிரக்கணக்கான கழக, மன்றத்தோழர்கள் கலந்து கொள்வதற்காக பவானிசாகர் சட்டமன்றத் தொகுதி உறுப்பினரும் பெரியார் மாவட்ட மன்ற செயலாளருமான நவரசம் ஜி. கே. சுப்பிரமணியம் மாவட்ட எம். ஜி. ஆர். மன்றத்தலைவர் அழகரசன், நம்பியூர் ராமலிங்கம் ஆகியோர் தீவிர ஏற்பாடுகளை செய்து வருகின்றனர்.

நம்பியூர், பு. புளியம்பட்டி, கோபிசெட்டிபாளையம், சத்தியமங்கலம், சென்னிமலை, பெருந்துறை தொகுதி உள்பட பல தொகுதிகளிலிருந்து திரளான மன்றத்தோழர்கள் மாநாட்டில் கலந்து கொள்கின்றனர்.

## வடாற்காடு தோழர்கள்

வடாற்காடு மாவட்டத்திலுள்ள மன்ற, கழக தொழிற்சங்க, மாணவர் பிரிவுத் தோழர்கள் 5 ஆயிரம் பேர் வேலூர் இரா. ச. மாறன் தலைமையில் தனி பஸ்கள் மூலமாகவும், வாகனங்கள் மூலமாகவும் சேலம் மாநாடு செல்கின்றனர்.

## நெய்வேலி

நெய்வேலியிலிருந்து நூற்றுக்கணக்கான கழக, மன்றத்தோழர்கள் பேருந்துகள், வேன்கள் மூலம் சேலம் மாநாட்டிற்கு செல்கின்றனர் என்று நெய்வேலி நகரச்

(5-ம்பத்தி பார்க்க)

# தொழில் வளர்ச்சியில் தமிழகம் பின் தங்கிவிட்டதா?

## ஆதாரத்துடன் நாவலர் விளக்கம்

**சென்னை, ஜூன் 12- தொழில் வளர்ச்சியில் தமிழகம் மற்ற எந்த மாநிலத்துக்கும் பின்னடைந்து விடவில்லை. தொழில் வளர்ச்சியில் அகில இந்திய அளவில் மூன்றாவது இடத்தில் இருக்கிறது என்று நிதியமைச்சர் டாக்டர்நாவலர் கூறினார்.**



சென்னை பிண்டோ, ரோட்டரி எண்ணெ ஆலை உரிமையாளர்கள் சங்க 23-வது ஆண்டு விழாவும் சங்கத் கட்டிடத் திறப்பு விழாவும் லாயிட்ஸ் காலனியில் உள்ள சமுதாய நலக் கூடத்தில் நடந்தது.

நிதியமைச்சர் நாவலர் விழாவில் கலந்துகொண்டு சங்க கட்டிடத்தை திறந்து வைத்து பேசினார்.

சின்னமணி நாடார் தலைமை வகித்தார். வர்த்தக சங்க பொருளாளர் கிருஷ்ணமூர்த்தி சங்க முன்னாள் தலைவர்கள்-சங்க கட்டிடத்துக்காக நிதி வழங்கியவர்களின் புகைப்படங்களை திறந்து வைத்தார்.

பாண்டியன், பழனிவேலு எஸ். ஏ. கிருஷ்ணமூர்த்தி, குமாரசாமி பாண்டியன், காசிசாமி ஆகியோர் பேசினர்.

சங்க முன்னாள் தலைவர் நாமதேவ் நிதியமைச்சருக்கு பொன்னாடை போர்த்தி வரவேற்பிதழை வாசித்தளித்தார்.

நிதியமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:

சங்கப் பணிகள் தங்கு தடையின்றி சிறப்பாக நடக்க கட்டிடம் வாங்கியிருப்பதை பாராட்டுகிறேன்.

இங்கே சில பல தன்மைகளைச் சொன்னார்கள். பல குறைபாடுகளை, சங்கடங்களை சொன்னார்கள். சங்கடங்கள் துயரங்கள் இல்லாத துறையே இல்லை.

அவரவர் நிலையில் அவரவர்களுக்கு பல சங்கடங்கள் உள்ளன.

எண்ணெக்கு விற்பனை வரியிலிருந்து விலக்கு அளிக்க வேண்டும் என்று கோரியிருக்கிறீர்கள். இது வருவாய் துறைக்கு சம்பந்தப்பட்டதாகும்.

மற்ற உணவுப் பொருள்களுக்கு இல்லாதபோது எண்ணெக்கு எதற்கு? என்று கேட்டு இருக்கிறீர்கள். இது நியாயம்தான்.

எவ்வளவு வருமானம் என்று நீங்கள் திட்டமாக சொல்லவில்லை. சொற்பமாக, குறைந்த வருமானம் இருந்தால் நீக்குவதில் பெரிய சுமை இருக்காது ஆனால் அதிக வருமானம் இருந்தால்நீக்குவதுசிரமம். இது குறித்து முறையாக எழுதி தருவீர்களானால் சம்பந்தப்பட்டவர்களுடன் கலந்து வழி வகை செய்ய உதவுவேன்.

நாங்கள் ஆட்சிக்கு வந்த பிறகு பல பொருள்களுக்கு பலமுனை வரிகள் இருந்தன. அதை ஒரு முனை வரியாக மாற்றினோம். சிலவற்றிற்கு வரியை நீக்கினோம்.

### விலையை குறைக்க வேண்டும்

வரியை நீக்குகிறோமே தவிர விலைகள் குறைவதில்லை. வரிகள் நீக்கும் போது விலையை குறைத்து சமுதாயத்துக்கு உதவ வேண்டும்.

கலப்படத்தை பற்றி சொன்னார்கள். இதுமத்திய அரசுசட்டம் இயற்கையில் கொழுப்பு ஏற்படுகிறது என்றால் அது நியாயம்தான். ஆனால் கலப்படத்தையும் கொழும்பு அதிகம் உள்ளதையும் அறிந்து கொள்ள முடியும்.

இது சம்பந்தமாக உங்கள் யோசனையைஅளிப்பீர்களானால் மத்திய அரசுக்கு பரிந்துரை செய்ய ஆலோசிப்பேன்.

கலப்பட சட்டம் வேண்டாம் என்றால் அதை ஏற்றுக்கொள்ள முடியாது. எல்லோரும் கலப்படம் செய்வதில்லை. நல்லவர்களும் இருக்கிறார்கள். ஒரு சிலர் செய்யும் தவறால் சட்டம் வருகிறது.

### கட்டுப்பாடு இல்லை

இப்போதுள்ள அரசு நல்ல அரசு, அதிகக் கட்டுப்பாடுகள் இல்லாத அரசுதான்.

"வெல்லப் பாகுபாடு ஒதுக்கீடு அவசியம். போதுமானது கிடைக்கவில்லை" என்று கூறியிருக்கிறீர்கள், விவரமாக எழுதிக்கொடுத்தால் அதுபற்றி ஆராயலாம். இதற்கான நெறி முறையை உருவாக்கலாம்.

வரவினம் ஏற ஏற, செலவு இனத்தையும் காட்ட வேண்டியுள்ளது.

வெள்ளைக்காரன் காலத்தில் 14 கோடி ரூபாய் வருமானம் வந்தது. கல்விக்காக அப்போது ரூ. இரண்டரை கோடிதான் ஒதுக்கப்பட்டது. ஆனால் இந்த ஆண்டுமட்டும் கல்விக்காக 265கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

ஓரினத்தில்செலவுகுறைந்தால் அடுத்த இனத்தில் அதிகமாகிறது.

22 மாநிலங்களிலே தமிழக அரசு மட்டும்தான் ஏழை எளியவிவசாயிகளின் விவசாயக் கடன் 133 கோடி ரூபாயை தள்ளுபடி செய்திருக்கிறது.

ஒன்னே முக்கால்லட்சம் பேருக்கு வசதியற்ற விதவைகள், அநாதைகள், முதியோர் ஆகியோருக்கு வாரம் வாரம் ஒரு கிலோ அரிசி வழங்க முயற்சி எடுக்கப்பட்டு அது நடந்து வருகிறது.

மதுவிலக்கை எடுத்தால் பணம் வரும் என்றார்கள். நான் எங்கேயும் 240கோடி ரூபாய் வரும் என்று சொல்லவில்லை.

இந்த ஆண்டு சரியாக சொல்ல முடியாது, அடுத்த ஆண்டிலிருந்துதான் ஸ்டெடி செய்ய முடியும், இந்த ஆண்டு 100 கோடி அளவுக்கு வரும். அடுத்த ஆண்டிலிருந்து 240 கோடி ரூபாய் வரும் என்று சொல்லலாம்.

மற்ற மாநிலங்களில் 100 கோடி, 120 கோடி என்று வருகின்றது.

இந்த ஆண்டு தமிழகத்தில்பற்றுக்குறைபட்ஜெட் போட்டிருக்கிறோம். இதை ஈடுகட்ட வேண்டும்.

### 3-வது இடத்தில்...

இங்கே பேசிய கிருஷ்ணமூர்த்தி தமிழகம் தொழில் துறையில் மூன்றுவது இடத்தில் இருந்தது 13-வது இடத்துக்குப்போய் இருக்கிறது என்றார்.

தமிழகம் தொழில்துறையில் 3-வது இடத்தில்தான் இருக்கிறது. சில வகைகளில் நாம் 3-வது இடத்தில் தான் இருக்கிறோம்.

தொழில் இன்வெஸ்ட்மெண்டில் 3 வது இடத்தில் இருக்கிறோம்.

முதலாவது இடத்தில் மகராஷ்டிரமும், இரண்டாவது இடத்தில் குஜராத்தும், 3-வது இடத்தில் தமிழகமும் இருக்கிறது.

ஐந்தாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் நபர் வாரி திட்டச் செலவில் 13 வது இடத்தில் தமிழகம் இருந்தது,

அதில் கூட இப்போது நாம் 5-வது இடத்தில் இருக்கிறோம்.

### மத்திய அமைச்சர் தகவல்

சமீபத்தில் தஞ்சையில் நிருபர்களிடம் பேசிய மத்திய தொழில்துறை துணை அமைச்சரும் தமிழகம் தொழில் துறையில் மற்ற எந்த மாநிலங்களையும்விட பின்னடைந்து விடவில்லை. இதில் 3வது இடத்தில் உள்ளது என்று தெளிவுபட பேசியிருக்கிறார்.

இந்தியா முழுவதும் 20 ஆயிரத்துக்கும் மேலான சிறு தொழில்கள் நலிந்து உள்ளன.

மேற்கு வங்கத்தில் 3 ஆயிரத்துக்கு மேற்பட்ட சிறு தொழில்களும், மகாராஷ்டிரத்தில்2 ஆயிரத்துக்கு மேற்பட்ட சிறு தொழில்களும், ஆந்திரத்தில் ஆயிரதத்துக்கு மேற்பட்ட சிறு தொழில்களும், கேரளத்தில் அதற்கு மேலும், சிறு தொழில்கள் நலிந்த நிலையில் உள்ளன?

இதில் நாம் 8-வதுஇடத்தில் இருக்கிறோம். மிகவும் குறைந்த எண்ணிக்கையுள்ள சிறு தொழிற்சாலைகளே நலிந்த நிலையில் இங்கே உள்ளன. அதிலும் நாம் மோசமாக இருக்கவில்லை.

மனித உரிமைகளை காப்பதில் அகில இந்திய அளவில் 22 மாநிலங்களில் தமிழகம்தான் முதலில் இருக்கிறது.

அகில இந்தியாவிலேயே தொழில்துறையில் நாணயம் நேர்மை கடைப்பிடிப்பதில் முதலிடத்தில் இருப்பதும் தமிழகம்தான்.

தொழில் நுட்ப திறன், அறிவு, ஆற்றல் பெற்றவர்களும் தமிழகத்தில் குறைவில்லை.

தொல்லைகள் இல்லாத வகையில் அரசும், மக்களும் வியாபாரிகளும் நிம்மதியாக தமிழகத்தில் இருக்கின்றனர்.

உங்களது நியாயமான சங்கடங்களை போக்கஅரசு உங்களுக்கு ஒத்துழைப்பு தரும்.

இவ்வாறு நிதியமைச்சர் நாவலர் கூறினார்.

சேலம் மாநாடு:

மூர்த்தி தலைமையில்

## தியாகராய நகரிலிருந்து 13 பேருந்துகள்

சென்னை, ஜூன் 12- சென்னை தியாகராய நகரில் இருந்து 13 பஸ்களில் சேலம்மாநாட்டுக்கு கழகத் தோழர்கள் புறப்படுகிறார்கள். தி.நகர் மூர்த்தி தலைமையில் புறப்படும் இந்த தோழர்கள் அண்ணா சமாதிக்கு முதலில் சென்று அஞ்சலி செலுத்தி விட்டுப்புறப்படுகிறார்கள்.

# கொள்கைகளை விட்டுவிட்ட கருணாநிதி



## அமைச்சர் குழந்தைவேலு தாக்கு

சென்னை, ஜூன் 12— கொள்கைகளை லட்சியங்களை இழந்து வெறும்பொம்மைபோல் கருணாநிதி உள்ளதாக அமைச்சர் குழந்தை வேலு கூறினார். கொள்கை பிடிப்பு உள்ளவர்கள் அக்கட்சியில் இருந்து விலக வேண்டும் எனவும் அவர் மேலும் கூறினார்.

சென்னை ஆயிரம்விளக்கு தொகுதி ராமநாய்க்கன் தெருவில் நடந்த கழகப் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு அமைச்சர் குழந்தை வேலு பேசியதாவது:

மக்கள் நன்மை அடைய வேண்டும். அதுதான் முக்கியம் என்ற அடிப்படையில் நாங்கள் ஆட்சியை நடத்திக் கொண்டு வருகிறோம்.

5 கோடி மக்களுக்கு நல்ல திட்டங்களை தீட்டி செயல்படுகிறோம்.

இந்த ஆட்சி தமிழகத்தில் இல்லை என்றால் வேறு எந்தஆட்சிவரப்போகிறது?

### குடுகுடுப்பை மனோகரன்

மனோகரன் இந்த ஆட்சிக்கு தேதி குறிப்பிட்டு பேசுகிறார். வருகிற 18-ந் தேதி நல்ல காலம் வரப் போகிறதுஎன்று குடுகுடுப்பைக்காரன் போல மனோகரன் தேதி கொடுத்திருக்கிறார்.

18-ந் தேதிக்கும் பிறகு என்ன வரப்போகிறது? நாங்கள் எதிர்பார்ப்பது வரப்போகிறதா? அல்லது நீங்கள் எதிர்பார்ப்பது வரப்போகிறதா?

இரண்டரை ஆண்டு காலம் பதவிச் சுகத்தை அனுபவித்து விட்டுச்சென்றவர்தான் அவர். உலர்ந்து விட்ட சருகாக இன்று உள்ளார்.

எங்கேஇருக்கவேண்டுமோ அங்கேதான் அவர்கள் இருக்கிறார்கள்.

தி மு க பொருளாளர் சாதிக் பாட்சாவை இந்த தொகுதியில்தோற்கடித்து அமைச்சர் கே ஏ கேக்கு பெரும் வெற்றியைதேடித் தந்திருக்கிறீர்கள்.

கடந்த 1967-71-ம் ஆண்டு தேர்தலில் சாதிக் பாட்சாஉடுமலைப்பேட்டையில் நின்றுவெற்றி பெற்றார் 77-ம் ஆண்டு அங்கேவருவார் என்று எதிர் பார்த்தேன். ஆனால் அங்கே வரவில்லை. இங்கே ஓடி வந்தார்.

மீண்டும் அவர் எங்கே நிற்கிறாரோ, அங்கே நிற்க வேண்டும் என்றிருந்தேன் நான் நிற்கிறேன் என்றார் கேஏகே.சாதிக்பாட்சாவைத் தோற்கடித்து ஆயிரம் விளக்கு தொகுதியை அண்ணா தி.மு.க.வின் கற்கோட்டையாக மாற்றியுள்ளார்.

### சாதிக்பாட்சா எங்கே?

சாதிக்பாட்சா எங்கே இருக்கிறார் என்று இப்போது தெரியவில்லை. முதியோரை கீழே தள்ளிவிட்டு மனோகரன், சுப்புலட்சுமி தான் அங்கே இருக்கிறார்கள்.

சுப்புலட்சுமி திராவிடப் பாரம்பரியத்திலிருந்து வந்தவரா?

இன்றையதினம் தி.மு.க சீரடைந்து வருகிறது. இப்போது மாலை போட்டுக்கொண்டு தனது அரிப்பைத் தீர்த்துக் கொள்கிறார்.

எடைக்கு எடை நாணயம் வாங்கிறார்.

பணம் கொடுத்தால் தான் அந்தக் கட்சியில் இருப்பார். பணம் இல்லை என்றால் கட்சியிலிருந்து விலகிவிடுவார்.

கருணாநிதிவாழ்க்கையின் ஓரத்தில் இருக்கிறார்.

மனோகரன் 18-ந் தேதி என்று கெடு வைத்திருக்கிறார். பல தேதிகள் குறிப்பிடப்பட்டு நாங்கள்பார்த்தாகி விட்டது.

கடந்தசட்டப்பேரவைக் கூட்டம் முடிந்த பிறகு பேராசிரியர் அன்பழகன் 27-ந் தேதிக்கு பிறகு இந்த அரசு இருக்காது என்றார்.

சி. டி. தண்டபாணி 28-ந்தேதி என்று நான் குறிப்பிட்டார். இப்போது மனோகரன் 18-ந்தேதி நல்ல காலம் வரப்போகிறது என்கிறார்.

தி.மு.க.வுடன் இருக்கும் இந்திரா காங்கிரஸ்காரர்கள் அன்றுநடந்த மதுரை சம்பவத்தை நினைத்துப் பார்க்க வேண்டாமா?

உயரஉயரப்பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகமுடியாது? தமிழகத்தில் இந்திராகாங்கிரஸ்ஆட்சிப் பொறுப்புக்குவரமுடியாது புரட்சித்தலைவர் தெள்ளத் தெளிவாக சொன்னார் திராவிடப் பாரம்பரியத்தை தவிரவேறுயாரும் தமிழகத்தில் ஆட்சிக்கு வர முடியாது என்றார்.

ஆனால் கருணாநிதி திருப்பத்தூர்இடைத்தேர்தலில் நாங்கள் உங்களை(இ.காங்) ஆதரிப்போம் என்று

(3-ம் பத்தி பார்க்க)

(6-ம் பத்தி தொடர்ச்சி)

கூறுகிறார்.

கருணாநிதிக்கு கொள்கை இருக்கிறதா? திராவிடப் பாரம்பரியம் இருக்கிறதா!

கொள்கைகளை, இலட்சியங்களை இழந்து வெறும் பொம்மை போல் இருக்கிறார். வெறும் ஆளாக அங்கே இருக்கிறார்.

கொள்கை பிடிப்புஉள்ள தி.மு.க.தோழர்கள்அந்தக் கட்சியிலிருந்து விலக வேண்டும்.

தி.மு.க.வை கலைத்து விட்டு இந்திரா காங்கிரசில் சேரலாம் என்ற நிலைமை உள்ளது.

இன்று தி மு க வில் எத்தனை பேர் உறுப்பினர்களாக உள்ளனர்.

தி மு க வின் எரிப்பு போராட்டத்தின் போது இந்த தகவல் கிடைத்து இருக்கிறது.

மொத்தம் 7,158 பேர் தான் தி மு க வில் உறுப்பினர்களாகஇருக்கிறார்கள் கருணாநிதி "உள்ளேபோங்கள் உள்ளே போங்கள்" என்று வேண்டுகோள்கள் விட்டும் 7158 பேர்தான் சிறைக்குசென்றனர். அதே நாளில் 600 பேர் திரும்பி வந்து விட்டனர்.

எப்படிப்பட்ட நிலை இருந்தாலும், அசையாத கட்சியாக, அழியாத கட்சியாக, உருப்படியான கட்சியாக நாட்டு மக்களுக்கு உதவும் கட்சியாக அனைத்திந்திய அண்ணா திமுகழகம் இருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு பேசினார்.

# இலங்கைத் தமிழர்களை காத்திட டில்லிக்கு ராசாராம் வேண்டுகோள்

**சென்னை, ஜூன் 2- இலங்கையில் பெரும் பாதிப்புக்கு உள்ளாகியுள்ள தமிழர்களை பாதுகாக்க மத்திய அரசு முன்வர வேண்டும் என்று சபாநாயகர் ராசாராம் வேண்டுகோள் விடுத்தார்.**

இலங்கைத் தமிழர்களுக்கு அநீதி இழைக்கப்படுவது குறித்து சென்னையில் நடந்த கண்டனக்கூட்டத்தில் கலந்துகொண்டு சபாநாயகர் ராசாராம் பேசுகையில் கூறியதாவது:—

ஆப்பிரிக்காவில் குஜராதிகளுக்கு பாதிப்பு ஏற்பட்ட போது உடனடியாக மத்திய அரசு தலையிட்டு நடவடிக்கை எடுத்தது.

அது போல இலங்கை தமிழர் பிரச்சினையில் உடனடியாக தலையிட வேண்டும்.

உழைத்து அந்தநாட்டை உருவாக்கிய தமிழர் சமுதாயம் பாதிப்புக்குள்ளாகி உள்ளது. இதை தடுக்க வேண்டும்.

இலங்கையில் கொல்லப்பட்ட தமிழர்களுக்கு எனது ஆழ்ந்த இரங்கலை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு சபாநாயகர் ராசாராம் கூறினார்.

## தீர்மானங்கள்

கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் வருமாறு:-

இலங்கை தமிழகமான ஈழத்திலே தமிழினத்தார் நடத்திவரும் உரிமைப் போரை ஒடுக்க சிங்களவர் செல்வாக்கிலுள்ள இலங்கை அரசு ஈவு இரக்கமின்றி ஒடுக்குவது குறித்து சென்னை நகரமக்களடங்கிய இக்கூட்டம் மிகுந்தகவலை கொள்கிறது.

கடந்த வாரத்தில் அங்கு நடைபெற்ற மாவட்ட கவுன்சில் தேர்தலின் போது நெருக்கடி நிலைமையை பிரகடனம் செய்து யாழ்ப்பாணம் பகுதியில் ஊரடங்கு உத்தரவையும் அரசு பிறப்பித்துள்ளது.

பத்திரிகை செய்திகள் தணிக்கை செய்யப்பட்டுள்ளன. அதனால் அங்கு நடைபெறும்கொடுமைகள் முழுவதையும் அறிந்து கொள்ள முடியாத நிலை இருந்து வருகிறது.

யாழ்ப்பாணத்தில் தமிழர்கள் வீடுகளை கொளுத்தியும் தமிழ் மக்களை சுட்டுக்கொன்றும் ராணுவத்தார் நடத்தியுள்ள அடக்கு முறையை இக்கூட்டம் வன்மையாக கண்டிக்கிறது.

இதனை ஐ. நா. மன்ற விதிமுறைப்படி இனக் கொலையாக கருதி எடுத்துக் கொண்டு இலங்கை தமிழர்களுக்கு பாதுகாப்பு தருமாறு மத்திய அரசை இக்கூட்டம் கேட்டுக் கொள்கிறது.

இவ்வாறு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## பாங்க் அதிகாரி பதவியேற்பு

சென்னை, ஜூன் 12- ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவின் புதிய தலைமை ஜெனரல் மேனேஜராக கே. எஸ். சி. பானி இன்று பதவி ஏற்றார். இவர் இதற்கு முன் ஸ்டேட் பாங்க் ஆப் திருவாங்கூரின் மானேஜிங்டைரக்டராக இருந்து வந்தார்.

128-வது வட்ட

## கழகத்தோழர் மறைவு

சென்னை, ஜூன் 12 சென்னை 128-வது வட்டம் பல்லக்கு மாநகரைச் சேர்ந்த கழகத்தோழர் சி. சண்முகம் 10-ந்தேதிஇரவு மாரடைப்பால் இயற்கை எய்தினர்.

கழகம் துவக்கிய காலத்தில் இருந்து கழக உறுப்பினராக சண்முகம்இருந்து வந்தார்.

மறைந்த கழகத் தோழருக்கு 128-வது வட்ட கழகத் தோழர்கள் அஞ்சலி தெரிவித்தனர்.

மயிலை ஐ.ஜி. அலுவலகத்திற்குப் பின்புறம் உள்ள மயானத்தில் இறுதிச்சடங்குநேற்று நடைபெற்றது.

# சினிமாவில் வருவது போல் திருட முயன்ற வாலிபர் கைது

சென்னை, ஜூன் 12— சினிமா பார்த்து விட்டு அதில் வருவதுபோலதிருட முயன்ற வாலிபர் கைது செய்யப்பட்டார்.

இது பற்றிய விவரம் வருமாறு:—

ஓட்டேரியைச் சேர்ந்த ரவிக்குமார். (வயது 25) இவர் ஓர் சினிமாவை பார்த்து விட்டு அதில் வரும் வில்லனைப் போல ரவிக்குமாரும், நீண்ட கவுன் அணிந்து முகத்தை சுற்றி கர்சீப்பைக் கட்டிக் கொண்டு புரசைவாக்கம், ஆச்சாரப்பன் தெருவில் உள்ள ஓர் மார்வாடி வீட்டிற்குச் சென்றாராம்.

அங்கு கதவைத் தட்டியவுடன் அவ்வீட்டைச் சேர்ந்த கமலாபாய் என்பவர் கதவைத் திறக்கவே ரவிக்குமார், கத்தியைக் காட்டி மிரட்டினாராம்.

இதற்குள் வீட்டிற்குள் இருந்த சாரதாம்பாள் என்ற வேலைக்கார அம்மாள் சத்தம் போட்டார்.

இதையடுத்து அவ்வீட்டின் முன்புறம்தையல்கடை வைத்துள்ள முகைதீன் என்ற நபரும் மற்றும் சிலரும் சத்தம் போட்டு ரவிக்குமாரைப் பிடித்தனர்.

தகவல் அறிந்த போலீசார் ரவிக்குமாரை கைது செய்தனர்.

சினிமா பார்த்து விட்டு அதைப்போல திருட முயன்றதாக ரவிக்குமார் கூறினாராம்.

ரவிக்குமாரை மடக்கிப் பிடித்த முகைதீன் உட்பட மூவருக்கு போலீஸ் கமிஷனர் ஸ்ரீபால் தலா 50ரூபாய் வீதம் அளித்தார்.

75-வது வட்டத்தில்

## நடந்த கழகக்கொடி ஏற்றுவிழா

சென்னை, ஜூன் 12- முதல்வர் புரட்சித்தலைவர் மீண்டும் ஆட்சிப் பொறுப்பில் அமர்ந்து முதலாண்டு நிறைவை யொட்டி சென்னை 75-வது வட்டம், என், எஸ். கே. நகரில் உள்ள பொன்மனச்செம்மல் எம். ஜி. ஆர். பொது நல மன்றத்தின் சார்பில் கழகக் கொடியேற்று விழா நடந்தது.

எஸ். அப்துல் வகாப் தலைமையில் நா. துவாரக நாதன் கழகக் கொடியை ஏற்றி வைத்தார். மு. கலியபெருமாள் இனிப்பு வழங்கினார்.

மன்றப்பணி மனையிலிருந்து திரளான கழகத் தோழர்கள் ஊர்வலமாகச் சென்று அண்ணா சிலையை அடைந்தனர். பகுதி செயலாளர் வ. கோதண்டராமன் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்.

ஏ. மாரிமுத்து, எஸ்.ஏ. சாத்தையா, மூர்த்தி, தங்கராஜ், அமானுல்லா, சங்கர் வி. முனுசாமி, டி. ஆர். சீனியம்மாள், கே.ரத்தினம்மாள், சரஸ்வதி, லட்சுமி விஜயா உள்பட திரளான கழக மன்றச் செயல் வீரர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

## கழகத்தில் இணைந்த இ. காங்கிரசார்

மதுரை, ஜூன் 12— கமுதி ஒன்றியம் ராமசாமி பட்டி சிவாஜி மன்றச் செயலாளர் என். எம். ராமகிருஷ்ணன் தலைமையில் 30 இ. காங்கிரசார் அந்தக் கட்சியிலிருந்து விலகி கழகத்தில் சேர்ந்தனர்.

# சேலம் மாநாட்டில் பங்கேற்கும் கழக மாணவர் பிரிவினர்

சேலம் மாநாட்டில் பங்கேற்கமாணவர் அணியினரும் துடிப்போடு முன் வந்துள்ளனர்.

வட சென்னை கழக மாணவர் பிரிவின் சார்பில் என். ராமச்சந்திரன் தலைமையில் சு. மனோகரன் கே. ஜி. சேகர், சத்திய நாராயணன், வி.பி. உதய சூரியன், சுரேஷ்குமார், அழகிரிசாமி, ராஜ்குமார், பாபு, சோமசேகரும் மற்றவர்களும் பேருந்து மூலம் ராஜாஜிசிலையில் இருந்து புறப்படுகிறார்கள்.

## வீரபாண்டி விஜயலட்சுமி அழைப்பு

சேலம் நகரில் 13, 14 தேதிகளில் நடைபெறும் மன்ற மாநாட்டில் மகளிர் பெரும் அளவில் பங்கேற்க வேண்டும் என்று வீரபாண்டி தொகுதி கழக எம். எல். ஏ. விஜயலட்சுமி வேண்டுகோள் விடுத்துள்ளார்.

தாய்க்குலத்தின் தலைமகனும், தமிழகத்தின் ஒளிவிளக்காம் இதயதெய்வம் புரட்சித்தலைவர் பெயரால் நடைபெறும் மாநாடு சீரோடு சிறப்புற ஊர்வலத்திலும், மாநாட்டிலும் தாய்க்குலம் பெரும் அளவில் பங்கேற்க வேண்டும் என்று விஜயலட்சுமி அழைத்துள்ளார்.

## 110 வது வட்டம்

சென்னை 110-வது வட்டம் புரட்சித்தலைவர் அறிவுச் சுடர்மன்றத்தில் இருந்து கழகத்தோழர்கள் புறப்படுகிறார்கள்.

முன்னாள் வட்ட அமைப்பாளர் ஏழுமலை தலைமையில், மன்ற செயலாளர் மு. ராசமாணிக்கம் முன்னிலையில் 50 பேர் பேருந்தில் செல்கிறார்கள்.

அண்ணா சாலையில் பேரறிஞர் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்துவிட்டு புறப்படுகிறார்கள்.

## சிந்தாமணி பட்டி

திருச்சி மாவட்டம் சிந்தாமணிப் பட்டியில் இருந்து மன்றத் தோழர்கள் சேலம் மாநாடு செல்கிறார்கள்

ஏ. கே. எஸ். சேட்டு, கே.பி, ராசு, பரமேஸ்வரன் ஷாகுல் ஹமீது, தங்கவேல் பச்சை ஆகியோர் தலைமையில் பேருந்தில் இவர்கள் புறப்படுகிறார்கள்.

## வால்பாறை

கோவை பொள்ளாச்சி வட்டம் வால்பாறையைச் சேர்ந்த முடீஸ் பகுதி மன்றத்தின் சார்பாக500க்கும் மேற்பட்டமன்றத்தோழர்கள், கழகத் தோழர்கள், சேலம் மாநாடு வருவதாக அறிவித்துள்ளனர்.

இதற்கான ஏற்பாடுகளை வை. முத்தையாவும், எஸ். எம். லூர்தசாமியும் வீரமுத்துவும, சி. சுப்பிரமணியமும் செய்து வருகின்றனர்.

## 93 வது வட்டம்

சிங்காரச் சேலத்தில் நடைபெறும்மாநாட்டுக்கு சென்னை 93-வது வட்டத் தோழர்கள் இ.மதுசூதனன் தலைமையில் பேருந்து மூலம் புறப்படுகிறார்கள். கழகத் தோழர்கள் இரா. சின்னப்பனுடன் தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக் கொண்டுள்ளார்.

## பத்திரிகை வெளியீட்டு விழாவில் நடந்த விதவைத் திருமணம்

சென்னை, ஜூன் 12— ஏ. பி. வரதராசனை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் "டார்ஜான் பறக்கும் படை" வெளியீட்டு விழா நடந்தது. இந்த விழாவில் திருநாவலூர் தொகுதி இருவேல்பட்டு, காலனி கிளைக் கழகச் செயலாளர் இ. எஸ். சுப்பிரமணியத்துக்கும், அதே கிராமத்தில் வசிக்கும விதவை கே. பத்மாவதிக்கும் திருமணம் நடந்தது. அமைச்சர் முத்துசாமி புதிய பத்திரிகையை வெளியிட்டு, இந்த திருமணத்தை நடத்தி வைத்தார்.

ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி முதல் இதழைப் பெற்றுக் கொண்டார். கு. க. செல்வம் விழாவிற்கு தலைமை வகித்தார்.

வை.பெருமாள், ஜெ.சி.டி. பிரபாகரன் எம்.எல்.ஏ சி வி.ஆடலழகன், கோடம்பாக்கம் குமார், எஸ். ஏ. ராஜபாண்டியன், தி. நகர் மூர்த்தி, ச.கணேசன்வி.கு. சச்சிதானந்தம், சா. கோவிந்தசாமி, செ. சுந்தரம், கே. தட்சிணாமூர்த்தி, து. மதிவாணன், இரா. பாண்டியன், எஸ். எஸ். அலியார். சம்சுதீன் தேவராஜன்ஆகியோர்பேசினர். பத்திரிகை ஆசிரியர் ஏ.பி. வரதராசன் நன்றி கூறினார்.

### பேச்சாளர் முகவரி:

வெடி சண்முகம்
மணி அய்யர் சந்து,
மணி நகரம்,
மதுரை-10